கம்பன் அறநிலை
KAMBAN TRUST
KARAIKUDI- S. RY

ஸ்ரீ:

# ஓவியப் புரு

1052

ஸ்ரீ வைணவச் செல்வம்
சிந்தாமணிச் செம்மல்

மு. இராமசாமி, எம்.ஏ., பி.எட்.,
இராசிபுரம்.

: வெளியீடு :

கம்பன் கழகம் நாமக்கல்

வெளியீடு : 2

பதிப்பு : முதற் பதிப்பு

நாள் : 10 - 7 - 87

உரிமை : ஆசிரியர்க்கு

பயன் பட்ட தாள் :
TNPL 26·4 K.g.

பயன் படுத்திய எழுத்து :
10 Pt. & 12 Pt.

விலை ரூ. 15-00

பக்கம் : 137

பதிப்பகம் :

**திருவரங்கம்**
7, எல்லப்ப செட்டியார் காலனி,
இராசிபுரம்-637 408
சேலம் Dt.

அச்சிட்டோர் :

**சன்-மூன் பிரிண்டர்ஸ்**
அம்மாப்பேட்டை, சேலம்-636 003



கம்பநாடுடைய வள்ளல்
கவிச்சக்ரவர்த்தி பார்மேல்
நம்புபாமாலையாலே நரர்க்கும்இன்
அமுதம் ஈந்தான்.



## அன்புப்படையல்

பாரதம் உயரச் சிறையகத் துற்ற
　　பண்பினர்; செந்தமிழ்த் தாய்க்குச்
சீரமை கோயில் எடுத்தவர்; காந்தி
　　திருவுளம் உவந்தநல் தொண்டர்:
வாரமாய் இராம காதையே யாண்டும்
　　வயங்குறக் கழகங்கள் கண்டார்:
பூரணர் கம்ப னடிப்பொடி மலரில்
　　புதுமணம் பெறுகஇத் தனிநூல்.

கம்பன் அறநிலை
KAMBAN TRUST
KARAIKUDI- S. RY

ஸ்ரீ :

இதனுள்.................

ஐந்து கவிதைகள், கட்டுரை வடிவம் பெற்று விரிந்து அடங்கி உள்ளன. கவிதைகள் ஐந்தும் கவிச்சக்கரவர்த்தி கம்பர் பெருமானது கலை மலிந்த சீர்மை பெற்று வெளிவந்தவைகள்.

கவிச்சக்கரவர்த்தி வழங்கிய கவிதைகள் அனைத்தும், கட்டுரைகளாய் விரிந்து, கண்டார் வியக்கும் வண்ணம் தம் பெருவடிவினைக் காட்டும் ஆற்றல் பெற்றவைகளே.

அவ்வடிவழகினைக் காண கண்கள் வேண்டும். கற்பனைக் கலையை, கண்ணாடியாக அணிந்து கொண்ட கண்கள், கவிதைகளின் முழு வடிவினையும் எளிதாகக் கண்டு, அதன் பெருமையை உணர்ந்து இன்புற முடியும்.

கற்பார் தம் இதயங்களைத் தம்பால் ஈர்த்து ஈர்த்து இன்பம் நல்க வல்ல ஆயிரக்கணக்கான கவிதைகளைக் கொண்டது கம்பர் படைத்த காவியம் அதில் உள்ளவைகள் அனைத்தும் செவிநுகர் கனிகளே.

ஆயினும், ஐந்து மட்டும் இங்கு ஏன்?

அசோகவனத்துள், சோகத்தாள் ஆய நங்கையளாய்த் துவண்டு கிடக்கிறாள் சீதாபிராட்டி, நல்லோர்களது சோகத்தைப் போக்குவதற்காகவே, அவதாரம் செய்த இராமபிரானுக்குத் துணையாக வந்த பிராட்டியும் சோகத்தாள் ஆயினாள்.

'பிறரது துன்பத்தைப் போக்கும் நற்செயலில் ஈடுபடுபவர்கள், தாமும் முதலில் துன்பத்தைத் தழுவியே ஆக வேண்டும்' என்பது இயற்கை நியதி போலும்.

பிறர் துயர் துடைக்க முற்படும் தக்கார்களைச் சேர்ந்த துயரமே, தனித்ததோர் ஏற்றம் பெற்றுக் கொள்வதும் இயற்கைவிதி போலும!

இந்த இயற்கை நியதியும் விதியும் பிராட்டியைச் சோகத்தின் உச்ச கட்டத்திற்கே செலுத்திவிட்டது.

'இனி, இறத்தலே அறத்தின் ஆறு' என்ற முடிவுக்குத் தள்ளப் பட்ட பிராட்டி அச்செயலில் இறங்கவும் துணிந்துவிட்டாள்.

துணிவைத் துண்டிக்கும் துணிவுடைய ஒருவனது வருகையின் இன்றியமையாமையைத் தோற்றுவித்துள்ளது இச்சூழ்நிலை.

எந்த இயற்கை நியதி, பிராட்டியைச் சோகத்தின் இறுதியைத் தழு வத் தூண்டியதோ, அந்த இயற்கையைத் தழுவிய வாழ்க்கையன் ஒரு வனைக் கொண்டுவந்து, பிராட்டிக்கு முன்னால் நிறுத்தியது காலச்சூழ் நிலை.

உலகை இயக்கும் ஆற்றல் பெற்ற இயற்கைச் சக்திகள் ஐந்து. இந்த ஐந்துடனும் (பஞ்சபூதங்கள்) இணைந்து நின்றவன் அனுமன்.

எதிர்பாராத அனுமனது வருகை, பிராட்டிக்கு உயிர் தந்து உதவியது.

'இறத்தல் அறத்தின் ஆறு அன்று; இருத்தல்தான் அறத்தின் ஆறு' என்பதைப் பிராட்டிக்கு உணர்த்தும் ஆற்றல் அனுமன் ஒருவனுக்கே உண்டு.

உலகிற்கே அறம் உணர்த்தவந்த பிராட்டிக்கு, 'அறத்தின் ஆறு இதுதான்' என்று உணர்த்தும் ஆற்றல், எங்கிருந்து வந்தது அனுமனுக்கு.

'மண்திணிந்த நிலனும்,
நிலன்ஏந்திய விசும்பும்,
விசும்புதைவரு வளியும்,
வளித்தலைஇய தீயும்,
தீமுரணிய நீரும், என்றாங்கு

ஐம்பெரும் பூதத்து இயற்கை யோடும் இயைந்த வாழ்க்கையால், ஆற்றல் பெற்றனன் போலும் அனுமன்!

உயிரைவிடத் துணிந்த பிராட்டியைத் தக்க நேரத்தில் வந்து காப் பாற்றி உதவியவன் அனுமன்.

'மும்மையாம் உலகம் தந்த
முதல்வற்கும் முதல்வன் தூதாய்,
செம்மையால் உயிர்தந் தாய்க்குச்
செயல்என்னால் எளியது உண்டே!
அம்மையாய் அப்பனாய அத்தனே!
அருளின் வாழ்வே!
இம்மையே மறுமை தானும்
நல்கினை இசையோடு'

என்றும்

'பாழிய பணைத்தோள் வீர!
துணை இலேன் பரிவு தீர்த்த
வாழிய வள்ளலே'

என்றும்

தன்னைக் காப்பாற்ற அனுமன் செய்த உதவியை எண்ணி மகிழ்ந்து, அவனை வாயாரப் பாராட்டுகிறாள்.

தக்க நேரத்தில் தன்னை வந்து காப்பாற்றிய அனுமனது புறத் தோற்றத்தைக் கண்ட சீதாபிராட்டிக்கு ஓர் ஐயம் தோன்றியது. இச்சிறு வடிவம் கடலை எப்படிக் கடந்தது? பிராட்டியின் ஐயம் இதுதான்.

பிராட்டியின் ஐயத்தைப் போக்கினான் அனுமன் எப்படி?

மக்கள் துயர்போக்க வாமனனாய் வந்தவன், திரிவிக்கிரமனாக ஓங்கி உயர்ந்து நின்றானே, அப்படி சிறுவடிவினனாக வந்த அனுமன், தனது பேர் உருவத்தைக் காட்டினான்.

'உருவு கண்டு எள்ளாமை வேண்டும்' என்று, தன் பேர் உருவைக் காட்டி, பிராட்டியின் ஐயத்தை அகற்றினான் அனுமன்.

பிராட்டியின் உயிரைக் காப்பாற்றியும், ஐயத்தைப் போக்கியும் உதவிய அனுமனே யாவரையும் காப்பாற்றுவான் என்பதை நன்கு உணர்ந்தவர் கம்பர்.

அதனால்,

'அஞ்சிலே ஒன்று பெற்றான்
அஞ்சிலே ஒன்றைத் தாவி,
அஞ்சிலே ஒன்று ஆறுஆக
ஆருயிர் காக்க ஏகி
அஞ்சிலே ஒன்றுபெற்ற அணங்கைக்
கண்டு அயலார் ஊரில்
அஞ்சிலே ஒன்று வைத்தான்
அவன்நம்மை அளித்துக் காப்பான்?

என்று, தம் காப்பியத் தொடக்கத்தில் அனுமனுக்கு வணக்கப் பாடல் பாடுகின்றார் கவிஞர்.

ஐந்து இயற்கைப் பொருள்களோடும் கலந்த வாழ்க்கையினனாய அனுமனை நினைவுகூர்கின்ற வகையில் ஐந்து கவிதைகள் இங்கு.

அவன் பேர் உருவைக் காட்டியது போன்று, கவிதைகள் ஐந்தும், கட்டுரை அமைப்பில் தம்பெருவடிவினைக் காட்டி நிற்கின்றன இதனுள்.

இங்கு விளக்கம் பெற்றுள்ள ஐந்து கவிதைகளும் உருவத்தாலும் உணர்வாலும் அனுமனை ஒப்பன.

பிரிந்து கிடந்த பிராட்டியும் பெருமானும் ஒன்று சேர்வதற்கு உறுதுணையாக இருந்தவன் அனுமன். தத்துவக் கண் கொண்டு நோக்கினால், ஆச்சாரியஸ்தானத்தில் வைத்து வழிபடுதற்கு உரியவன் அனுமன்.

பரமாத்மாவை விட்டுப் பிரிந்து, உலகியலில் சிக்குண்டுத் தவிக்கும் ஜீவாத்மாவுக்கு நல்வழிகாட்டி, அதனைப் பரமாத்மாவோடு இணைத்து வைக்கும் பெரும் பணியைச் செய்பவர்கள் ஆச்சாரியர்கள்.

இராமாயணத்தில் அத்தகைய நல்லதோர் கைங்கர்யத்தைச் செய்தவன் சொல்லின் செல்வனாய அனுமன்.

இங்கு வந்த கவிதைகள் ஐந்தும், பக்தர்கள் பகவானோடு இணைவதற்கேற்ற மனப்பக்குவத்தை அவர்பால் ஏற்படுத்தும்.

ஆகவே,

'நாட்படா மறைகளாலும், நவைபடா ஞானத்தாலும் கோட்படாப் பதமே, ஐய! குரக்கு உருக்கொண்டது, என்று, அனுமனைக் கண்ட இராமபிரான் வியப்புற்றுப் பேசியதைப் போல, அந்த அனுமனே இந்த ஐந்து கவிதைகளின் விரிவுரையாகக் காட்சி அளிக்கின்றான் என்று கொள்ளலாம்.

மேலும், ஒரு பாடலுக்கு இவ்வளவு விரிவுரை வேண்டுமா? என்ற கேள்வி எழலாம்.

ஆச்சாரிய பீடத்திற்குரிய அனுமனுக்கு வணக்கம் கூறவந்த கவிஞர், கற்றார்க்குரிய இலக்கிய வழக்குச் சொல்லாகிய 'ஐந்து' என்பதைப் பயன்படுத்தவில்லை, 'அஞ்சு' என்ற பொது மக்கட்குரிய உலக வழக்குச் சொல்லைத் தம் கவிதையில் இணைத்துக் கொண்டார். ஏன்? சிந்தனைக்குரியது.

இச்சிந்தனைக் கேள்வி ஓர் உண்மையை வெளிக்கொணர்கிறது.

கற்றோர்க்கே அன்றி, மற்றையோர்க்கும் தம் காப்பியம் இன்பம் நல்க வேண்டி, இத்தகைய உலக வழக்குச் சொல்லுக்குத் தம் கவிதையில் இடம் அளித்திருக்கலாம் கவிச்சக்கரவர்த்தி.

புலவர் பெருமான் கவிதைகளை, சாதாரணப் பொதுமக்களும் அனுபவிக்க வேண்டும் என்பது அவர்தம் நோக்கமாக இருக்கலாம்.

அந் நன்னோக்கத்தை நிறைவேற்ற எழுந்ததே இவ்விரிவுரை.

சென்ற ஆண்டு கம்பர் விழாவில் 'இராமாவதாரம்' என்ற தொகுப்பு நூல் வெளியிடப் பெற்றது. 1000 பாடல்களைக் கொண்ட அத்தொகுப்பு, கதைக்கோர்வை கலையாமல், சுவையான பாடல்களைக் கொண்டது.

அதனைப் பெற்ற கம்பன் காவிய ஆர்வலர்கள், 'மூலம் மட்டும் பெற்று என் செய்வது? உரைவிளக்கம் இல்லாமல் இதன் பயனை நாங்

கள் பெறமுடியாதே' என்றனர். அவர்கள் விருப்பினை ஓரளவேனும், நிறைவேற்றலாம் என்ற ஆசைபற்றியதே இச்சிறு நூலின் தோற்றம்.

முதற் கட்டுரைத் தலைப்பே, நூற்பெயராகிவிட்டது, ஏன்? நடையில் நின்றுயர் நாயகன், காப்பியத் தலைவன். (நடை-ஒழுக்கம்) 'இந்த இப்பிறவியில் இருமாதரைச் சிந்தையாலும் தொடேன்' என்ற செம்மைப் பட்ட மனமே இல்வாழ்க்கையில் ஆண்கள் கடைப்பிடிக்க வேண்டிய ஒழுக்கம், ஒருவனும் ஒருத்தியுமாக வாழும் நல்வாழ்க்கையை, புறாக்களின் மூலம் காட்டுகின்றார் கம்பர். அதனால் அதுவே முதன்மை பெறுகிறது.

இதற்கு அணிந்துரை நல்கிய பேராசிரியர், தமிழ்த் தென்றல். திரு, வி. க. அவர்களின் அபிமானபுத்திரர்! இலக்கியத் திறனாய்வுத் தந்தை: கம்பன் கவிதைக் கலையின் காதலர்: பழம்பெரும் தமிழ் இலக்கியங்களில், புதுமைகாணும். காட்டும் புரட்சியாளர்; பக்தி இலக்கியங்களை, பகுத்தறிவோடு அணுகும், இதயம் கனிந்த நல்லதோர் பக்தி உணர்வினர்; உணர்ந்ததை, எண் பொருளவாகச் செலச் சொல்லும் சொல் வல்லார்; தாம் கண்டறிந்த இலக்கியப் பேருண்மைகளை, துணிவோடு தெளிவாக எழுத்துருவாக்கும் சிறந்த எழுத்தாளர்: 'அ. ச. ஞானசம்பந்தன், என்ற திருநாமத்தினர்.

இவர் தம் கைவண்ணம் பெற்று, தமிழ் இலக்கிய உலகில் உலா வரும் படைப்புக்கள் அனைத்தும் புதுமைக் கோலம் பூண்டவைகளே. ஒவ்வொன்றற்கும் ஒவ்வொரு விதமான ஏற்றம் உண்டு.

'இலக்கியக்கலை' என்ற இவர்தம் புதுமைப் படைப்பு, பல இலக்கியத் திறனாய்வாளர்களை உருக்கியுள்ளது இலக்கியத் திறனாய்வை. கலையாகக் காட்டும் இப்பெரு நூல், பல இலக்கியச் செல்வர்களைத் தம் பால் ஈர்த்துக் கொண்டது,

தமிழ்ப் பல்கலைக் கழகத் தத்துவ மையம்-காஞ்சிபுரம், இங்கு சிறப்பு நிலைப் பேராசிரியாக அமர்ந்துள்ள இவர், பெரியபுராணம்-ஓர் ஆய்வு' என்றதோர் அரிய படைப்பை, அண்மையில் வெளியிட்டுள்ளார்கள். அவ்வெளியீடு பழமையின் பண்பையும், புதுமையின் சாயலையும் தத்துவ உணர்வோடு படம் பிடித்துக் காட்டுகிறது; வேத காலம் தொட்டு, இந்நாள்வரை, சமய ஞானமும், பக்தி உணர்வும் எவ்வாறு வளர்ந்து வந்துள்ளன என்பதைத் தெளிவாக்குகிறது.

பேராசிரியர், பலப் பல இலக்கியங்களிலும் தோய்ந்தவரானாலும், கம்பர் காவியமே அவர்தம் உள்ளத்தைத் தம்பால் ஈர்த்துக் கொண்டது என்னலாம்.

தம்பியர் இருவர், அரசியர் மூவர், நாடு, நகரம், இராவணன் மாட்சியும் வீழ்ச்சியும் முதலியபல படைப்புக்கள், பேராசிரியர் கம்பர் காவியத்தில் எவ்வளவு ஈடுபாடு கொண்டவர் என்பதைக் காட்டும்.

எல்லாவற்றிற்கும் மேலாக கம்பனில் புதிய பார்வை' என்ற இவருடைய படைப்பு கம்பர் ரசிகர் உலகில் தலை நிமிர்ந்து செம்மாந்து நிற்கிறது.

இத்தகைய, இலக்கியத்திறனாய்வுச் செல்வராய், கம்பர் காவியக் கலைஞராய்த் திகழும் பேராசிரியர், இச்சிறு நூலுக்கு, அணிந்துரை நல்கியதை, யான், வாழ்க்கையில் பெற்ற பெரும் பேறாகக் கருதி மகிழ்கின்றேன்.

அணிந்துரை நல்கியதன் மூலம், தமிழ் கூறும் இலக்கிய நல்லுலகில் புதுமைப் புரட்சியாளராய் உலாவரும் பேராசிரியர், என் மனக்கடலுள் என்றும் வாழ வல்லவர் ஆவார். வல்லவரை என்றும் வணங்கி மகிழ்வேன்.

நல்லோர் பல்லோரும் ஒருசேர இதனைக் கண்டுகளிக்கும் வகையில், தம் திருக்கரத்தால் வெளியீடு செய்கின்ற அறிஞர் பெருமகனார், திரு. எஸ். டி. காசிராசன், இ. ஆ. ப. அவர்கள் ஆவார். இவர் தமிழ் நாடு போக்குவரத்து ஆணையராகவும், உலகத் தமிழ்ச்சங்கத் தனி அலுவலராகவும், பச்சையப்பன் அறக்கட்டளையின் தலைவராகவும் பணியாற்றுபவர்: பலப் பல அரசாங்க அவசர வேலைகளின் நெருக்கடியிலும், இலக்கியஇன்பத்தில் திளைத்து அமைதி காண்பவர்: நவில்தொறும் நவில்தொறும் நூல்நயம் காணும் நல்லவராதலால், இலக்கிய அன்பர்கள், பயில்தொறும் பயில்தொறும் பழக இனிக்கும் பண்பினராவர்; உயர்ந்த உத்தியோகத்தினரானாலும், இலக்கிய இன்பம் காண யாரிடமும் தாமே வந்து தொடர்பு கொள்ளும் எளியர்; கற்றார் அவையின்கண் அளவறிந்து சொல் வழங்கும் நாநலம் பெற்றவர்: எளியநடையினில் தம் எழுத்துக்களை உருவாக்கும் சிறந்த எழுத்தாளராய்த் திகழ்பவர்.

தமிழ்த்தாத்தா எனப்படும் இரு பெரும் சான்றோர்களையும், தம் எழுத்தால் வடித்துக் கொடுத்த பெருமைக்குரிய இவர், தமிழகத்து நல்ல றிஞர்கள் பலரோடும் தொடர்பு கொண்டுள்ளார்கள். அங்கங்கே கலை களைத் தேர்ந்து கொண்ட நல்லறிஞராய இவர்தமிழ்த் தென்றல் திரு. வி. க. அவர்களை ஒரு இலக்கியமாகவும், உ. வே. சா. அவர்களை ஒரு தமிழ் வாழ்வாகவும் கண்டார். தாம் கண்டதைஅப்படியே உருவாக்கிப், படைத்துள்ளார். அப்படைப்புக்கள், தமிழ் இலக்கிய ரசிகர்களுக்கு நல்ல இனிய விருந்துகளாகும்.

இத்தகைய சால்புடைப் பெருமகனார், இந்நூலை வெளியிட இசைந்தமை, எனக்கும் இவர்தம் திருவுளத்தில் ஓர் இடம் அளித்துள்ளார் என்பதைக் காட்டுகிறது. இடம் அளிக்கும் இனியவரை யானும் என்றும் நீடு நினைந்து போற்றிப் போற்றி இன்புறுவேன்.

இதனை வெளியிட, விழாவில் ஒரு காலப்பகுதியை ஒதுக்கிக் கொடுத்த, நாமக்கல் கம்பன் கழகத்தினர் அனைவரும் எனது பாராட்டுத லுக்கும் மதிப்பிற்கும் உரியவர் ஆவர்.

குறித்த காலத்தில் இதனை அழகுற அச்சிட்டுக் கொடுத்த திரு S.சண்முகம், சேலம் சன் மூன் அச்சகத்து உரிமையாளர் இவர் அச்சகத் தொழிலில் புதிதாகப் புகுந்த ஆர்வம் மிக்க இளைஞர். ஊக்கத்தோடும் உற்சாகத்தோடும் அச்சகத் தொழிலில் முன்னேற்றம் காணத் துடிக்கும் இவரே, இந்நூலின் உட்பொருளுக்கேற்ற அட்டைப் படங்களை உரு வாக்கி அதனை முன்னும் பின்னும் அமைத்து, புத்தகத்தின் புறத்தோற் றத்தை அழகுபடுத்தியுள்ளார். அசைவிலா ஊக்கம் நிறைந்த இந் நல் இளைஞரை ஆக்கம் அதர் வினாய்ச் சென்று சேரும் என்பதில் ஐயம் இன்று, இவர் என்றும் எனது வாழ்த்துக்குரியவராவார்.

அனைவருக்கும், என்றும் மறவாப் பெரு நன்றியன் இறுதியாக:

இதனுள் காணும் கருத்துக்கள் ஏதேனும், பழமைக் கருத்துக்க ளோடு முரண்பட்டு குற்றம்,உடையதாக, அறிஞர்களால் காட்டப்படுமா னால், அதனை ஏற்றுப் போற்றி மகிழ்வேன்.

அன்புள்ள,

**மு. இராமசாமி,**

7, எல்லப்ப செட்டியார் காலனி,

இராசிபுரம். 8-6-87.

# அணிந்துரை

பேராசிரியர். **அ. ச. ஞானசம்பந்தன்**

நண்பர் திரு. மு. இராமசாமி அவர்கள் எழுதியுள்ள 'ஓவியப்புரு' என்ற நூலைக் காணும் வாய்ப்புப் பெற்றேன். கம்பன் பற்றிய ஐந்து கட்டுரைகளின் தொகுப்பாகும் இந்நூல். முதற் கட்டுரை 'ஓவியப்புரு' என்பதாகும். கம்பன் பாடல் ஒன்றில் வரும் ஒரு சித்திரத்தை அடிப்படையாகக் கொண்டது இக்கட்டுரை. இரை தேடச் சென்ற ஆண்புரு, கோபுரத்தில் வாழும் தன் பெடையை மறந்து, அங்கு சிற்பியால் செய்து வைக்கப் பெற்றிருந்த பெண் புருவிடம் தங்கிவிட்டதாம். அதனால் ஊடல் கொண்ட பெண்புரு, அப்படியே கற்பகச் சோலைக்குள் புகுந்து தன்னை மறைத்துக் கொண்டது. ஆண்புரு பெடையுடன் அமைதியாக வாழ்ந்தது, இராகவன் பிராட்டியுடன் வாழ்ந்ததைக் குறிக்கிறது. ஓவியப்புருப் போல் சூர்ப்பணகை இடையில் வந்து, இவர்களைப் பிரித்துவிட்டாள் என ஆசிரியர் முதல் கட்டுரையில் பேசுகிறார். **Symbolism** என்ற மேனாட்டுத் திறனாய்வாளர் குறிப்பதைக் கம்பன் பாடலில் ஏற்றிக் காண்கிறார் ஆசிரியர்.

'பிணியும் அணியும்' என்பது இரண்டாவது கட்டுரை. உடற்பிணி, உயிர்ப்பிணி என்ற இரண்டையும் விளக்கும் ஆசிரியர், உடற்பிணிக்கு மருத்துவரை நாடி ஓடும் மக்கள் உயிர்ப்பிணி மருத்துவனாகிய இறைவனை ஏனோ நாடுவதில்லை என்று கேட்டு வருந்துகிறார். 'வைத்தீஸ்வரன் என்றும், தன்வந்திரிப் பெருமாள் என்றும் பெயர்ப் பலகை மாட்டி வைத்துக் கொண்டு பிணியாளர்கட்குத் தம் இருப்பிடத்தை உணர்த்தும் உண்மை மருத்துவரை நாடுங்காலம் எவனுக்குக் கிட்டுகிறதோ, அவன் பிணியினின்றும் விரைவில் விடுதலை பெறுவான்' என்கிறார் ஆசிரியர்.

'தோளும் தாளும்' என்பது மூன்றாவது கட்டுரை. மிதிலையின் வானளாவிய கொடிகள் 'ஐயனை ஒல்லைவா' என்று அழைப்பதில் தொடங்குகிறார். மிதிலை நகர மக்களும், மன்னனும் கூட, வந்திருப்பவன் யார் என்று அறியமுடியவில்லை. இவர்கள் அனைவரும் முகத்தில் கண்கொண்டு பார்ப்பவர்களேயாவர். ஐயனை அழைத்து வரும் கோசிக முனிவன், உடன்வரும் பிள்ளை யார் என்பதை அறிந்தவன். மிதிலை மதில் கொடி

களும் அந்த இரகஸ்யத்தை அறிந்திருந்தமையின் கொடித்துணி என்னும் கைகளை நீட்டி அவனை அழைக்கின்றன என்கிறார் ஆசிரியர். 'உள்ள ஒன்றை நடக்கும் ஒரு செயலை அடிப்படையாக்கிக் கொண்டு, கற்பனை மெருகூட்டி கற்பார் உள்ளத்தில் சுவையாகத் தங்க வைப்பதுதான் கவிஞர்களின் கைவண்ணம்' என்கிறார் ஆசிரியர். மிதிலையுள் வரும் இராகவனைக் காண்பவர் செயல்களைத் 'தோள்கண்டார்' என்ற பாடலின் நுண்பொருள் கொண்டு விளக்குவது அறிந்து மகிழற்குரியது. இப் பாடலின் இறுதி அடியில் வரும் உவமையின் ஆழத்தையும் சிறப்பையும் நன்கு விளக்குகிறார். கட்டுரையின் முடிவில், 'ஏகாரம் தோற்றமாகும் போது, உலகியல் உலவுகிறது; அது வினாவாக மாறும் போது ஆன்மிகம் வந்து அணைந்து கொள்கிறது; என்று பேசுவது இவரது இலக்கண ஆன்மிக அறிவை விளக்கி நிற்கின்றது.

'முதல்வனும் புதல்வனும்' என்பது நான்காவது கட்டுரை. வாலி பற்றிப் பேசவந்த ஆசிரியர் 'எங்கு அளவு கடந்த வன்மை பெருகிக் கொண்டு வருகிறதோ, அதற்குப் பின்னாலாயே, அதனைத் தொடர்ந்து அழிவும் நகர்ந்து நகர்ந்து வந்து கொண்டே இருக்கும்? என்று கூறுவது சுவைபயப்பதாக உளது வாலியின் மரணத்துக்கு, இந்நூலாசிரியர் தம் நுண்மாண் நுழைபுலத்தால் புதிய காரணங்களைக் காட்டமுற்படுகின்றார். தம்பியின் நோக்கத்தில் வாலிகொண்ட ஐயமே, அவன் முடிவுக்கு முக்கிய காரணம் என்றும், சுக்கிரீவன் சரணம் அடைந்தமை துணைக்காரணம் என்றும் கூறுகிறார். இவருடைய வாதங்களை ஏற்றுக்கொள்ளாதவர்களும் இவருடைய திறமையைப் பாராட்டாமல் இருத்தல் இயலாது. என்றாலும் இவ்வாதத்தினுள் ஆசிரியரின் வைணவம் முன்னிற்பதைக் காண முடிகின்றது.

'அலங்கலா? அரவமா? என்பது ஐந்தாவது கட்டுரை. இந்த ஆசிரியரின் நுண்மாண் நுழைபுலத்துக்கும், தெளிந்த சிந்தனைக்கும் இக் கட்டுரை எடுத்துக்காட்டாகும்' அலங்கலில் தோன்றும் பொய்மை அரவு' என்று தொடங்கும் கம்பன் பாடலுக்கு 'இருப்பத்து நாலாயிரப்படி' பொருள் விரிக்கின்றார் ஆசிரியர். அத்வைதம், விசிட்டாத்வைதம் என்ற இரண்டு பெரிய கொள்கைகளையும் ஒருமைப் படுத்தமுயல்கிறான் கம்பன் என்பது ஆசிரியர் வாதமாகும். 'கவிதையின் முற்பகுதி அத்வைத வேதாந்

தத்தை விளக்குகிறது. பிற்பகுதி விசிட்டாத்வைதத்தை விளக்குகிறது' என்பது ஆசிரியர் கூற்று.

'பூதம் ஐந்தும் வேறுபாடுற்ற வீக்கம் கலங்குவது எவரைக் கண்டால்? அவர்.........' என்ற பகுதிக்கு, இந்த வேறுபாட்டுக்குக் காரணம் மாயை என்று பொருள்கொள்கிறர். இந்த வாதத்தை ஏற்க மறுப்பவர்களுங்கூட ஆசிரியரின் நுண்மையான அறிவையும் வாதத்திறமையையும் வியாமல் இருக்கமுடியாது. இந்தக்கட்டுரையில், கற்பனை என்ற சொல்லுக்குப் புதிய பொருள் காண்கிறர். இலக்கியத்திறனய்வு வளர்ந்து விட்ட இக்காலத்தில், 'கற்பனை' என்ற சொல் தனிச் சிறப்புடன் விளங்குகிறது. கற்பனை கவிதையில் அனுபவத்தைப் பெறவும், இன்பத்தை அதிகரிக்கவும் உதவுகின்றது என்பது திறனய்வாளர் கொள்கை, ஆனல், பழந்தமிழர் கற்பனை என்பதற்கு இல்லாதவற்றைப் புனைந்துரைத்தல் எனப் பொருள் கண்டனர். ஆசிரியர் இந்தப் பழம் பொருளில் கற்பனை என்ற சொல்லைக் கையாள்கிறர். காலத்தால் பொருள் மாறிவிட்ட ஒரு சொல்லை இவ்வாறு கையாள்வது பொருந்துமா என்பது ஆய்தற்குரியது.

இது எவ்வாருயினும் இந்தக் கட்டுரை தனிச்சிறப்புடன் இலங்குவதை எளிதில் அறியமுடியும். நூலுக்கே இக்கட்டுரையின் பெயரைச் சூட்டியிருப்பின் இன்னும் பொருத்தமாக இருந்திருக்கும்.

நண்பர் **இராமசாமி** மூலம் இத்தகைய நூல்கள் இன்னும் பலவும் வெளிவர இறைவன் திருவருள் புரிய வேண்டும். அது தமிழுக்கும் நாட்டுக்கும் நன்மை பயப்பதாக அமையும்.



ஸ்ரீ:

# ஓவியப்புரு

கோபுர தரிசனம் கோடி புண்ணியம்.

அதன் உயரம் காண்பவர்களின் உள்ளத்தைத் தன்னைப் போலவே உயர்த்துகிறது. அண்ணாந்து காண்பார் கண்களின் வழியாக உள்ளே புகுந்து அவரது உள்ளத்தைத் தட்டி எழுப்பி ஓங்கச் செய்கிறது கோபுரக் காட்சி.

எத்தனை விதமான காட்சிச் செல்வங்களைத் தன்னுள் அடக்கிக் கொண்டு அது செம்மாந்து நிற்கிறது.

பறவைகள், விலங்குகள், மக்கள், தேவர்கள், முனிவர்கள், தெய்வ உருவங்கள் பலப்பல தோற்றங்கள், பதுமைகளாகவும் ஓவியங்களாகவும் இடம் பிடித்துக் கொண்டுள்ளன, அக்கோபுரத்தில்.

உலக உயிரினங்கள் அனைத்தையும் தன்பால் ஓவியங்களாக அணைத்துக் கொண்டதால் தான் அது மேலோங்கி நிற்கிறதோ! அன்று! அன்று!

உலகில் நிற்பன நடப்பன எல்லாவற்றின் செயல்களையும் விளக்கிக் கொண்டிருப்பதால், கண்ணன், பாரதப் போரில் காட்டிய விசுவரூபக் காட்சிக்குப் போலியாய் இருக்கிறது.

அருச்சுனன், கண்ணன் காட்டிய விசுவரூபத்தில், நடந்த செயல்கள், நடக்க வேண்டிய செயல்கள் அனைத்தையும் கண்டான். 'நடக்கும் செயல்கள் அனைத்துக்கும் நாம் கருவிதான். அவன்தான் அனைத்தையும் நடத்துகின்றான், உணர்ந்தான் அருச்சுனன். பாரதப் போர்க்களத்துள் நுழைந்ததும், துறவியாகப் போவேன் என்றவன் காட்சிக்குப் பிறகு போர் வீரனாகத் துணிந்தான்.

கீழே எறியப்பட்ட வில் அவன் தோளில் ஏறியது: அம்புகள் ஒவ்வொன்றாக வில்லின் நாணைத் தொடுதற்குத் தயாராயின: போரில் எதிரியின் பக்கம், எவர் நிற்பினும் அவர்கள் அனைவரையும் வீழ்த்துதற்கும் தர்மத்தை வாழ்த்துதற்கும் உறுதி பூண்டான் அர்ச்சுனன்.

க்ஷத்திரயனுக்குரிய கடமை, அதர்மத்தை அழிப்பதும், தர்மத்தை அணைப்பதும்தான். அந்தக் கடமையைச் செய்யும் கர்மவீரனாகத் தன்னை உயர்த்தியது கண்ணபிரான் காட்டிய விசுவரூப தரிசனமே என்பதை நன்கு உணர்ந்தான் அருச்சுனன்.

பாரதப் போர்க்களத்தில் நுழைந்து எதைச் செய்வது என்று தடுமாறிக் கொண்டிருந்த அருச்சுனனை, இதைத்தான் செய்ய வேண்டும் என்று அவனுக்கு வழிகாட்டி, அவனை உயர்த்தியது கண்ணனின் விசுவரூபம்.

வாழ்க்கைப் போர்க்களத்தில் அல்லலுற்று உழலும் மக்களைத் தன்பால் அழைத்து அவர்களது சிந்தனையில் ஆயிரக்கணக்கான எண்ணங்களைத் தோற்றுவித்து, சிறப்பித்து உயர்த்துகிறது கோபுரக்காட்சி.

எப்படி?

காட்சியைக் காணக் கண்கள் வேண்டுமே!

மனிதனுக்கு இறைவன் கொடுத்த முகக் கண்கள் இரண்டும்,

கம்பன் அறநிலை
KAMBAN TRUST
KARAIKUDI- S. RY

வெளியில் உள்ளதை உள்ளுக்கும், உள்ளிருப்பதை வெளிக்கும் காண, காட்ட உதவும் இரண்டு சாளரங்கள் [ஜன்னல்கள்] என்பதை உயர்ந்தால் போதும், காணலாம் காட்டலாம்.

வீட்டுச் சாளரங்கள் செய்யும் பேருதவியினை உள்ளிருக்கும் மனிதன் நன்கு உணர்கின்றான். ஆனால் அதற்கு நன்றி செலுத்த எண்ணுவதும் இல்லை: சொல்லுவதும் இல்லை. புறத்தில் [வெளி] உலாவும் ஒளியையும் வளி [காற்று] யையும் அகத்தில் [உள்] சேர்க்கும் உதவி கிட்டாமற் போனால் மனிதன் எவ்வாறு வீட்டில் வாழ்வான்? வேண்டியது கிடைக்காமல் போனால்தான் மனிதன் சிந்திக்கின்றான். தேவைக்குரியதெல்லாம் தானாகவே வந்து விடுமானால், மனிதச் சிந்தனை, நல்ல உறக்கத்தில் ஆழ்ந்துவிடுகிறது. தேவையைப் பூர்த்தி செய்யும் காற்றும் வெளிச்சமும் தாமாகவே வந்து நெருங்கினால் உறக்கமும் தானாக வந்துவிடுகிறது.

சாளரங்களால்தான் இவை எல்லாம் நமக்குக் கிட்டுகின்றன என்று உறங்கிக் கிடக்கும் சிந்தனை எங்கே உணரப் போகின்றது? நன்றி உணர்வு எங்கே தோன்றப் போகின்றது?

தேவைப் பொருள்கள், கைக்கு வந்து சேராமற்போகும் போதுதான், இதுவரை, எதனால் அப்பொருள்கள் கிடைத்துக் கொண்டிருந்தனவோ, அதன் முக்கியத்துவம் [இன்றியமையாமை] புலனாகின்றது.

சாளரங்கள், வீட்டில் வாழும் மனிதனுடைய உடலுக்கு ஆரோக்கியத்தைத் தந்து முதன்மை பெறுகின்றன.

கண்களோ மனித உடலில் வாழும் உள்ளத்திற்கு இன்ப ஆரோக்கியத்தைக் கொடுத்து முக்கியத்துவத்தைப் பெறுகின்றன.

**கண்கள் :**

உள்ளத்தின் ஆரோக்கியம் இன்பத்தில்தான் அடங்கியுள்ளது. இன்பத்தைச் சேர்ப்பதற்கு கண்கள் எவ்வாறு உதவுகின்றன?

காண்பான், காணப்படுபொருள், காட்சி இந்த மூன்றும் ஒருங்கு சேரும் இடம் இன்பத்தோற்றமாகும்.

இந்த மூன்றும் இணைவதற்குக் கருவிகளாக இருப்பன கண்கள்.

முன்றன் இணைப்பினாலே உள்ளம் இன்பமும் அடையலாம்; ஆனந்தமும் பெறலாம். இன்பம், தனது முடிவில் துன்பத்தை வரவழைத்துக் கொடுத்துவிட்டு தான் விலகிக் கொள்ளும்.

ஆனந்தமோ என்றும் நீங்காமல் தான் வந்து சேர்ந்த இடத்தைக் களிப்பித்துக் கொண்டிருக்கும்.

நீங்காமல் நிறைவாக இருக்கும் ஆனந்தத்தை காண்பான் விரும்புகின்றானா? துன்பத்தைத் தன் பின்னாலேயே அழைத்துக் கொண்டு வரும் இன்பத்தை விரும்புகின்றானா என்பதைப் பொறுத்தது கண்களின் நல்லுதவியும் அல்லுதவியும்.

காண்பான், காணப்படுபொருள் தன் இந்திரிய சுகத்திற்கு உரியதாக அமைய வேண்டுமென விரும்பினால், கண்கள், உடல் இன்பக் காட்சிக்கே துணையாக இருக்கும்

இன்பம்: இன்பம்: இன்பம். இன்பம் முற்றிடில் துன்பம்; துன்பம்: துன்பம். இந்தப் பேருண்மையை உணர்த்துவது கண்களின் வேலையல்லவே!

இன்பத்திற்கு எதிர்ப்பதம் துன்பம். சொல்லில் மட்டும் அல்ல! பொருளிலும் வாழ்க்கையிலும் அப்படித்தான்.

ஆனால் ஆனந்தத்திற்கு எதிர்ச் சொல்லும் இல்லை: பொருளும் இல்லை.

காணப்படும் பொருள் ஒன்றே. காண்பான் ஒருவனுக்கு இன்பத்தை நல்குகின்றது. மற்றொருவனுக்கு ஆனந்தத்தைக் கொடுக்கின்றது.

இன்பத்தைப் பெற்றவர்கள் துன்பத்திற்கு ஆளாகிறார்கள். ஆனந்தம் அடைந்தவர்கள் ஆற்றல் பெறுகிறார்கள்.

காணப்படு பொருளின் மூலம், காண்பான் இன்பம்பெற்றானா? ஆனந்தம் உற்றானா என்பதைக் கண்களே வெளியில் காட்டிவிடும். வாயின் வேலையை கண்களே செய்துவிடும். பேசும் வேலையையும் வாயினிடத்து வாங்கிக் கொள்ளும். தின்னும் வேலையையும் தான் எடுத்துக் கொள்ளும்.

ஊதும் அத் தீங்குழற்கே உய்யேன்: நான்
அதுமொழிந்து இடையிடத் தன்செய் கோலத்
தூ துசெய் கண்கள்கொண்டு ஒன்று பேசித்,
தூ மொழி இசைகள் கொண்டு ஒன்று நோக்கி,
பேதுறும் முகம்செய்து நொந்து நொந்து
பேதை நெஞ்சு அறவறப் பாடும் பாட்டை
யாதும் ஒன்று அறிகிலம் அம்ம அம்ம!
மாலையும் வந்தது மாயன் வாரான் (திருவாய்மொழி.9.9.9.)

கண்களின் பேச்சைக் கேட்பது திருவாய்மொழித் தலைவியின் அனுபவம்.

காதலனைக் காட்டியதும் கண்கள்தாம். அவன் பிரிந்ததும், அழுவதும் கண்கள்தாம். 'தாம் நோக்கித்தாமேகலுழும்' யான் என் செய்வது?

பிரிந்த காதலனைத் தேடிக்கொண்டு காதலியின் நெஞ்சம் புறப்பட்டு விட்டது. நெஞ்சம் எங்கு வேண்டுமானாலும், எந்த நேரத்திலும் யாரையும் கேட்காமல் சென்றுவிடும். அதைத் தடுப்பார் யார்?

காதலி அதனைத் தடுத்து நிறுத்தி ஒன்று சொல்கின்றாள். நீ செல்லும் இடத்திற்கு இந்தக் கண்ணையும் அழைத்துப்போ, நெஞ்சே! ஏன் தெரியுமா?

'கண்ணும் கொளச்சேறி நெஞ்சே, இவை என்னைத்
தின்னும் அவற்கான லுற்று:
இது திருக்குறள் தலைவியின் அனுபவம்.

காணப்படுபொருளால். தாக்குண்ட உள்ள நிலையை உள்ளபடி எடுத்துச் சொல்வதும் கண்கள் தான்: அப்பொருள் கிடைக்காமல் போனால், அவ்வுள்ளம் உடையவரை உண்பதும் கண்கள் தான். அது அவரவர் அனுபவம்.

இதெல்லாம் உலகியல் காதல் காட்சியின் கண்கள் செய்யும் வேலை.

இதற்கு மேற்பட்ட ஒரு பக்குவநிலைக்கு காண்பான் உள்ளம் உயருமானால் அப்போது ஆனந்தம் நல்கும். ஆன்மீகக் காட்சிக்கு இதே கண்கள் உதவும்.

## அயோத்திமா நகர்க் கோபுரம் :

காதலையும் ஆன்மீகத்தையும் கலந்து காட்டும் அயோத்திமாநகர்க் கோபுரம் காண்பார் கண்ணைக் கவர்கின்றன.

'நிலமகள் முகமோ? திலகமோ? கண்ணோ? நிறைநெடுமங்கல நாணோ? என்று அயோத்திமா நகர் சிறப்பித்துப் பேசப்படுகின்றதென்றால்', அந்த உயர்வுக்குக் காரணம், இம்மாநகர்க்கு அமைந்த கோபுரம் தான். இது மிகையான உரையன்று. கோபுர மாடங்களில் அமைந்த சித்திரங்கள் சிற்பங்கள் கோபுரப் பெருமையை உயர்த்துகின்றன.

கட்டிடக் கலைஞர்கள், சிற்பக் கலைஞர்கள், ஓவியக் கலைஞர்கள் அனைவரின் கைவண்ணத்தையும் காட்டிக்கொண்டு வானளாவ உயர்ந்திருக்கும் இக்கோபுரக் காட்சியில் ஈடுபடாமல் யாரும் இம்மாநகர்க்குள் நுழைய இயலாது.

சிற்பங்களும் ஓவியங்களும் சிறந்தொளிரும் இவ்வளவு பெரிய கோபுரத்தைக் கட்டியது யார்? இதுதான் கோபுரத்தைக் காண்பவர்களின் முதல் கேள்வியாக இருக்கும்.

சக்ரவர்த்திதானே இவ்வளவு உயரமான பல அடுக்குகளை அடுக்கிக்கொண்ட கோபுரத்தைக் கட்ட முடியும்!

காண்பாரை வியப்பில் ஆழ்த்தும் இக்கோபுரத் தோற்றத்திற்கு உரியவர் வெறும் ச்க்ரவர்த்தி அல்ல, கவிச்சக்ரவர்த்தி.

புவிச்சக்ரவர்த்தி, கற்களால் செங்கற்களால் கோபுரம் கட்டுவான் அதற்கு மறைவு வரும் காலம் உண்டு.

ஆனால் கவிச்சக்கரவர்த்தி தன் சொற்களால்-செஞ்சொற்களால் உருவாக்கிய மாநகர்க்கோபுரம் என்றும், காண்பார் மனத்தில் நிறைந்து நிற்கும். கால வெள்ளத்தைக் கடந்தும் நிற்கும்.

கவிச் சக்ரவர்த்தி கம்பர் படைத்த கோபுரக் காட்சியைக் காண்போம்.

கோபுரத்தின் உச்சி, வானுலகத்து பொன்னகரத்தைத் தொட்டுக் கொண்டிருக்கின்றது. மன்னவரை நிமிர வைக்கிறது: விண்ணவரைக் குனிய வைக்கிறது.

கோபுரத்தில் ஏறுகின்றவர் விண்ணுலகத்தை விரைவில் அடையலாம். மக்கள் மட்டும் அல்ல தன்பால் வரும் எந்த உயிரினத்தையும் விண்ணுலகுக்கு அனுப்பும் உயரம் கொண்டது கோபுரம்.

தன்னிடமே கதி என்று வாழ்ந்து வந்த ஒரு புறா அதன் விருப்பத்திற்கேற்ப பொன்னகர் புகுதற்கு உதவியாக இருக்கிறது இக்கோபுரம்.

புறா கோபுரத்தைக் கடந்து, ஏன் பொன்னுலகப் பூஞ்சோலைக்குச் செல்ல வேண்டும்? அப்படி அங்கு நடந்தது என்ன?

கோபுரத்தில் நடந்த புறாச் செயல்களின் மூலம் கவிச்சக்ரவர்த்தி கம்பர் நமக்கு உணர்த்தும் உண்மைகள் பலப்பல.

## கோபுரப் புறாக்கள் :

'தாவில் பொன்தலம்' அது குற்றமற்ற சுவர்க்கலோகம். [தா-குற்றம்: இல்-அற்ற: பொன்தலம்-அவர்க்கபூமி] அங்கு உள்ளது அழகியதோர் கற்பகச் சோலை [கற்பகப் பொதும்பர்] காம்புகள் நீண்ட நல்ல மலர்களை மலர்வித்துள்ளது அச்சோலை. [தாள் பூவுயிர்த்த கற்பகப் பொதும்பர்] வேண்டியார்க்கு வேண்டியன நல்கும் இக்கற்பகச் சோலையைத் தங்கும் இடமாகக் கொண்டவர்கள் யார்?

ஓடும் செம்பொன்னும் ஒக்கவே நோக்கி, வீடும் வேண்டாவிற லின் விளக்குபவராய தவ வாழ்க்கை ஆன்மீகச் செல்வர்கள் தங்குமிட மாக்கிக் கொண்டார்கள் அக்கற்பகச் சோலையை. [நல்தவத்தினோர்கள் தங்கும் சோலை]

காதல் வாழ்க்கை வாழ்ந்த ஒரு புறாவும், அந்தச் சோலையைத் தன் இருப்பிடமாக்கிக் கொண்டது.

புலனடக்கம் கொண்ட ஆன்மீக வாழ்வினர்க்கும் அது இடம்.

ஐம்புலன் இன்பம் ஆரத்துயத்த காதல் வாழ்வினர்க்கும் அது இடம்.

'நற்றவம் செய்வார்க்கு இடம்: தவம் செய்வார்க்கும் அஃது இடம்: என்று இராசமாபுர நகரத்தைக் காட்டும் திருத்தக்க தேவரின் சிந்தா மணித்தொடரை நினைவூட்டுகிறது கம்பர் காட்டும் கற்பகச்சோலை. [நல்தவம்-துறவொழுக்கம்-தவம்-இல்லற ஒழுக்கம்]

தன் சேவலோடு கலந்தினிது வாழ்ந்த காதல் வாழ்க்கைப் பெட்டைப்புறா, ஏன் இருந்த இடத்தைவிட்டு கற்பகச் சோலைக்குச் சென்றது?

கோபுரத்தில் உயிர்ப் புறாக்கள் தம் வாழ்க்கையை ஆனந்தமாக நடத்திக் கொண்டிருந்தன. இந்த ஆனந்தத்தை ஆட்டம் காணவைத்தது ஓர் ஓவியப்புறா.

ஓவியப்புறா, உயிர்ப்புறாவை, மயங்க வைக்கும் அளவிற்கு, கலைஞனின் வண்ணத்தைப் பெற்று அழகுடன் திகழ்கின்றது.

சேவல் [ஆண்] புறா, இரைதேட வெளியில் சென்றுவிட்டு வந்தது. அதன் மனைமாட்சிக்குரிய பெட்டைப் புறா உயிர்க்குச் சமமான அன்போடு [ஆவி ஒத்த அன்பு] தன் சேவலை அழைத்தது.

அழைப்பைக் கேட்ட சேவல் புறா, உடனே சென்று சேர்ந்தது. தான் சென்று சேர்ந்த இடம் ஓவியப்புறாவுக்கு உரியது. தன் பக்கத்தில் தனக்குரிய பெண்புறா தான் இருக்கிறது. இந்த நினைவுதான் ஆண் புறாவுக்கு. ஓவியப்புறாவையும் உயிர்ப் புறாவையும் பகுத்தறிவு படைத்த மனிதனே பகுத்தறிய முடியாது. பாவம், புறா என்ன செய்யும்: புறாச் செயல் காதல் வாழ்க்கையின் புறச்செயல் அல்ல:

ஆனால் பெண் புறா என்ன எண்ணிக் கொண்டது?

'தங்கள் நாயகரின் தெய்வம் தான் பிறிதலை' என்று எண்ணும் மங்கையின் சிந்தையினளாய் நாம் இருக்கின்றோம். நம் நாயகரும் 'இந்த இப்பிறவியில் இரு மாதரைச் சிந்தையாலும் தொடேன்: என்று தானே இருக்க வேண்டும்: இவர் எப்படி வேறு ஒரு பெண் புறாவோடு சேரலாம். அதனால் நான் இவரோடு இனி சேரமாட்டேன்' என்று நினைத்தது. உடனே ஊடலோடு கற்பகச் சோலையைச் சென்று சேர்ந்தது.

புறாக்களின் காதல் வாழ்க்கைக்குத் தடையாக நின்றது அதே போன்ற உருவம் படைத்த ஓவியப்புறா.

ஓவியக் கலைஞனின் கைவண்ணம். ஓவியத்திற்கு உயிர்க்கொடுத்து விட்டது. ஓவியப் புறாவும் உயிர்ப்புறாவும் ஒன்றோடு ஒன்று மயங்குகின்றது.

இராசமாபுரத்தில் சச்சந்தன் பொறிஇயல் வல்லுனனை அழைத்து 'மயிற்பொறி ஒன்று செய்து கொண்டுவா' என்று ஆணையிட்டான். பொறி இயல் கலைஞனும் அரசன் ஆணைப்படியே மயிற்பொறி ஒன்று செய்து வந்தான். அத்தோடு ஒரு உண்மை (உயிர்) மயிலும் கொண்டு வந்து நிறுத்தினான்.

'அரசே! உங்களுக்கு வேண்டிய பொறி [இயந்திர] மயிலை எடுத்துக் கொள்ளுங்கள்' என்றான்.

அரசனுக்கு எது மெய்ம்மை? எது பொம்மை? [பொய்ம்மை] என்பது புரியவில்லை. பொம்மை [பொய்ம்மை] மயிலைத்தான் உயிர் மயில் என்று நம்பி அதனை விடுத்து, உயிர் உள்ள மயிலை இயந்திர மயில் எனத் தொட்டான்.

கவிச்சக்ரவர்த்தி கம்பர், திருத்தக்க தேவர் காட்டிய மயில் மயக்கத்தை புறா மயக்கமாக்கி விட்டார்.

ஓவியக் கலைஞனின் கைவண்ணப் பெருமையைக் காவியக் கலைஞர் எவ்வளவு அருமையாகச் சித்தரித்துக் காட்டுகின்றார்.

காவியத்தில் அமைந்த சொல் ஓவியத்தைக் காண்போம்.

"தாவில்பொன் தலத்தில் நல் தவத்தினோர்கள்,
தங்கு, தாள்
பூவுயிர்த்த கற்பகப் பொதும்பர் புக்கு
ஒதுங்குமால்;
ஆவிஒத்த அன்புசேவல் கூவ வந்து
அணைந்திடா,

ஓவியப் புறாவின் மாடு இருக்க
ஊடு பேடையோ''.

[கம். 116. நகரம். 13]

ஆவிஒத்த அன்புடன் சேவலைக் கூவ, அது. தன்பால் வந்து அணைந்து தழுவாமல், ஓவியப்புறாவின் பக்கம் இருக்கக் கண்டு ஊடிய பெண் புறா குற்றம் அற்ற பொன்னகரமாகிய சுவர்க்க லோகத்தில் உள்ள தவத் தினர்கள் தங்குவதும், மலர்கள் நிறைந்ததுமான கற்பகச் சோலையில் சென்று மறைந்து கொண்டது.

இந்தக் கோபுர தரிசனத்தைக் காண்பித்து, கவிச் சக்ரவர்த்தி, தம் கவிக் கோயிலுக்குள் நம்மை செல்ல விடுகின்றார். கோவிலுள் கண்டு தரிசிக்க வேண்டிய தெய்வ தரிசனத்தை, கோபுரமே முதலில் ஓரளவு, காட்டி விடும்.

கம்பர் கலைக்கோவில் தெய்வ தரிசனம் இராமபிரானும் சீதா பிராட்டியும் தானே!

''என் கலைக் கோயில் கருவறைப் பொருளை [கருத்து] கோபு ரத்திலேயே கண்டு கொள்ளுங்கள்'' என கவிச் சக்ரவர்த்தி சொல்லா மற் சொல்கின்றார்.

புறாக்கள் இரண்டும் சேர்ந்து தான் இருந்தன. ஓவியப் [போலி] புறா இடையில் வந்தது. பெண்புறா. கற்பகச் சோலையில் ஒதுங்கியது ''எனது இராமாயணம் இது தான்'' - பெருமானும் பிராட்டியும்: கற்பக வல்லி போன்ற சூர்ப்பனகை வருகை இருவரைப் பிரித்தது. பிராட்டி அசோகவனம் புக்காள்.

இராமாவதார நிறைவேற்றத்திற்கு சூர்ப்பனகை வருகை இன்றி யமையாததாயிற்று. புறாவின் காதல் வாழ்க்கைச் சிறப்பைக் காட்ட ஓவியப் புறாக் காட்சி தேவையாயிற்று.

உயிர், ஓவியமாகிறது. இதனைக் காட்டும் கம்பர் பாடல் நமக்கு உயிரோவியமாகிறது. இந்தக் கோபுர தரிசனம், இராமாயணத்தைக் கண்டு களிக்கும் புண்ணியத்தை நமக்கு நல்குகிறது.

ஸ்ரீ :

# உ. பிணியும் அணியும்

பிணிப்பது எதுவோ அது பிணி. கட்டுண்டவன், தானாக ஒன்றும் செயல்பட முடிவதில்லை. கட்டினின்றும் தன்னை விடுவித்துக் கொள்ள மனிதன் எண்ணினால், எண்ணம் நிறைவேறும்.

உடல் கட்டும் பிணிதான். உயிர்க்கட்டும் பிணிதான். உடலைக் கட்டும் பிணியை-நோயை மனிதன் எளிதில் அறிந்து கொள்கின்றான். ஆனால் உடலை இயக்கிக் கொண்டிருக்கும் உயிர்க்கு ஏற்பட்டுள்ள பிணியை-நோயை மனிதன் உணர்வதில்லை.

உடல் கண்ணுக்குத் தெரிகிறது. நோயும் உடனே புலப்படுகிறது. டாக்டரிடம் நோயாளி ஓடுகின்றான்; மருந்து பெறுகின்றான்; நோயி னின்றும்-பிணியினின்றும் விடுதலை பெற்றுக் கொள்கின்றான்.

1052



உயிரும் கண்ணுக்குத் தெரிவதில்லை. அதற்கு வந்த பிணியும் தெரிவதில்லை. உயிரும் அதன் பிணியும் உணர்வதற்குரியன.

உணர்பவன், பிணி தீர்க்கும் மருந்தைத் தேடி, அது கிடைக்கும்-கொடுக்கும் வைத்தியரிடம்-மருத்துவரிடம் ஓடுகின்றான்.

உடல் பிணி தீர்க்கும் மருந்துக்கும் காசு கொடுக்க வேண்டும்; மருந்துக்கு ஆலோசனை சொன்ன டாக்டருக்கும் காசு கொடுக்க வேண்டும்.

உயிர்ப் பிணி மருத்துவருக்கோ, ஒன்றும் கொடுக்க வேண்டாம். அவர் வீட்டுக் கதவு, என்றும், எந்நேரமும் அடையா நெடுங்கதவு. உயிர்ப் பிணியாளர்களை எதிர்பார்த்துக் கொண்டே இருக்கின்றார் இந்த வைத்தியர்.

பணம் வாங்கிக் கொண்டு பிணியை ஓட்டும் டாக்டரிடம் ஓடுவார் கள் எந்த செலவுமின்றி. பிணி தீர்த்து வைக்கும் உண்மை வைத்தியரை கண்டெடுத்தும் பார்க்க மாட்டார்கள். என்ன பைத்தியக்காரத்தனம்!

'வைத்தீஸ்வரன்' என்றும், 'தன்வந்திரிப் பெருமாள்' என்றும் பெயர்ப் பலகையை மாட்டி வைத்துக் கொண்டு, பிணியாளர்களுக்கு தம் இருப்பிடத்தை உணர்த்தும் உண்மை மருத்துவரை நாடும் காலம் எவனு க்குக் கிட்டுகிறதோ, அவன் விரைவில் பிணியினின்றும் விடுதலை பெறுவான்.

## உடல் பிணியும் உயிர்ப் பிணியும்:

உடலுக்கு வரும் நோய்கள்-பிணிகள் எண்ணிக்கையில் அடங்கா. உடல் பிணிகள் பல்வேறு வகையின. சில மருந்துக்கும், மருத்துவர்க்கும் அஞ்சுவன: சில வகையின. மருத்துவரையே அச்சுறுத்தும்; தம்மை அடக்க வரும் மருந்தையும் பயன் தர இயலாதபடி அடக்கிவிடும். எதற்

கும் கட்டுப்படாமல், எவரையும் தன் வயமாக்கிக் கொள்ளும் பெருமை யுடைய நோய்களும் உண்டு. அதனால் அது, தன் பெயரையே 'பெரு நோய்' என அமைத்துக் கொள்ளும்.

யாரைப் பிணித்துக் கொண்டதோ, அவரைத் தனித்து நிறுத்தி இனம் காட்டி வைக்கும் அப்பெருநோய். சமுதாயத்தில் சேர விடாது. தன்னால் அணைக்கப்பட்டவரை, இப்பெரும் பிணியில்-நோயில் அகப் பட்டவர் பக்கம், நோய் தீர்க்க வேண்டிய டாக்டரும் வருவதற்கு அஞ்சு வர். அவ்வளவு பயங்கரமான பெரும் பிணி.

உயிர்ப்பிணிகளும் பல்வேறு வகையினவாய் விரிந்து பரவியுள்ளன. உயிரைப் பிணித்துள்ள நோய்களை முதலில் கண்டுபிடிப்பதே அருமை யாக இருக்கும்.

உடல் பிணிகளைக் கண்டுபிடிக்க கருவிகள் உண்டு. ஆனால், உயிர்ப் பிணிகளைக் கண்டுபிடிக்க கருவிகள் எதுவும் இல்லை. பிணிக்கு ஆட்பட்டவர்களே அதனை உணர்ந்து, அது தீர்க்கும் வைத்தியரை நோக்கிச் செல்ல வேண்டும்.

உயிர்ப் பிணிகளிலும், ஆழமான, அழுத்தமான பிணி உண்டு. இது, பிறப்பிலேயே ஒட்டிக் கொண்டு வந்து விடுகின்றது. எப்படி அதனை விரட்டுவது?

"மங்கிய வல்வினை நோய்காள் உமக்கும் ஓர்
வல்வினை உண்டு என்று கண்டீர்.
இங்குப் புகேன்மின் புகேன்மின் எளிது அன்று
கண்டீர் புகேன்மின்"

என்று நோய்களை விரட்டும் வன்மை பெரியாழ்வாருக்குக் கிடைத் திருக்கிறது.

யாவர்க்கும் கிட்டுமா? கிட்டும், ஆழ்வார் வழியைப் பின்பற்றினால்.

ஆழ்வார் காட்டிய அன்பு வழியில் செல்லும் உயிரினத்தையும் பிணிக்கும் பிணி ஒன்று உண்டு. அதுதான் ஆணவம் என்ற பெயரில் உலவும் அகங்காரப் பிணி. இது. தன் துணைக்கு 'மமகாரப் பிணியையும் தன்னோடு இணைத்துக் கொள்கிறது. அகங்கார மமகாரப் பிணிகள் யாரைப் பிடித்துக் கொண்டதோ, அவரை, 'யான், எனது என்று சொல்ல வைத்து தனித்து நிறுத்தி வைத்துவிடும்.

## அகங்கார மமகாரங்கள்: (யான், எனது)

இணை பிரியாது வாழும் இவ்வுயிர்ப் பிணிகள் எதற்கும் அஞ்சுவதில்லை. யார்க்கும் பயப்படுவதில்லை. உயிர்ப் பிணி வைத்தியரான 'தன்வந்திரிப் பெருமாளையும்' தன்பால் வரவொட்டாது தடுக்கும். ஆணவம் நிறைந்த இடத்தில் ஆண்டவனுக்கு என்ன வேலை?

> "விண்ணுளார் பெருமாற்கு அடிமை செய்வாரையும்
> செறும்ஐம் புலன் இவை:
> மண்ணுள் என்னைப் பெற்றால் என் செய்யா?
> மற்று நீயும் விட்டால்"

என்று நம்மாழ்வாரைப் போல, பெருமாளிடமே முறையிட்டுக் கொள்ளும் வைராக்கியத்தைக் கண்டால், ஒரு வேளை, இப்பிணிகளுக்கு அச்சம் ஏற்படலாம்.

ஆனால், உலகியல் வாழ்க்கைப் போக்கோ, இப்பிணிகளுக்கு மேலும் மேலும் உரம் ஊட்டி வளர்ப்பதாகவே அமைந்துள்ளது.

பணத்தையும் பதவியையுமே நாடிக் கொண்டிருக்கும் உலகப் போக்கு, ஆணவப் பிணி மரத்துக்கு எவ்வளவு உரம் ஊட்டுகின்றது!

அம்ம; அம்ம! உரம் பெற்ற ஆணவ மரம், அகங்கார மமகாரக் கிளை களை வளர்த்திக் கொண்டு எவ்வளவு உயரமாய் ஓங்கி நிற்கிறது!

பணமும் பதவியும் ஏற ஏற, ஆணவம் உயர்ந்து கொண்டே போ கிறது.

உயரத்திற்குக் கீழ் நோக்கம் இல்லை. கீழிருப்பவர்களைப் பாரா தவர்களை, பகவானும் பார்க்க மாட்டான்.

பகவான் அருட்பார்வை பெறாதவர்களுக்கு, உய்வு எப்படிக்கிட்டும்?

ஆணவப் பிணி, ஆண்டவன் அருட்பார்வையையே, தன்னால் பிணிக்கப்பட்டவன் பால், வராமல் தடுத்து விடுகிறது என்றால், அதன் கொடுமையை என்னென்று உரைப்பது?

இப்பிணி நீங்க வழி உண்டா? உண்டு. 'இப்பிணிக்கு அகப்பட்டு விட்டோமே' என்ற ஏக்கம், வந்தால் போதும், இப்பிணியின் நீக்கம், தானே நிகழும்.

இப்பிணிக்கு ஆட்பட்டவர் மண்ணவர் மட்டும் அல்ல! விண்ண வரும் கூட.

**பிரம்மன்:**

"நான்தானே உலகத்தைப் படைக்கின்றேன்! என்னால்தானே எல்லா உற்பத்திகளும்? யான் படைத்த இவ்வுலகம் என்னால் தான் வாழ்கிறது: என்னைத்தான் இவ்வுலகம் போற்ற வேண்டும்: பாராட்ட வேண்டும்: வணங்க வேண்டும்".

இப்படி ஓர் எண்ணம் முளைத்துவிட்டது பிரம்மதேவன் உள்ளத் தில். முளைத்த எண்ணம் ஆணவப் பெயரில்தானே வளரும். அகங்கா ரமும் மமகாரமும் கிளைத்துவிட்டன.

முளைத்ததற்கு முடிவு உண்டு. தத்தம் முடிவை, தம்மை அறியா மலேயே தாமே தேடிக்கொள்ளும்.

ஆணவத்தின் வளர்ச்சி அனைவரையும் அடக்கப் பார்க்கிறது. அடங்குபவரை காணக் காண, ஆணவம் வளர்ந்து கொண்டே செல்லும்.

வளர்ந்த ஆணவம், தானே வளையும் காலம் வரும். எதனால் வளர்ந்தது இவ்வாணவம்? பதவியினால்தானே?

பதவி பறி போனால் தானே அடங்கிவிடும்.

பதவியில் இருக்கும்வரை, 'இப்பதவியை நமக்குக் கொடுத்தவன் யார்? அவனால்தானே பெயர் சொல்லிக் கொண்டிருக்கிறோம்' என்ற எண்ணம் தோன்றாமல் போனால், அவன் முடிவும் தானே தோன்றி விடும்.

தன்னுடைய படைப்புக்கு. அழிவு வரும்போதுதான் பிரம்மனும் சிந்திக்கின்றான்.

முதுகில் அடி விழும்போதுதான், 'நமக்கும் ஒரு முதுகு உண்டு; அதனைப் பதம்பார்த்து முத்தம் இட ஒரு கோலும் உண்டு கோலைக் காலம் பார்த்து, அனுப்புவதற்கு ஒரு தலைவனும் உண்டு', என்று எண்ணும் மனிதனைப்போல படைப்புத் தேவனும் எண்ணிப் பார்த்தான்.

பதவி-பெரும் பதவி - படைப்புப் பதவி. கொடுத்தவனுக்கே பறித்துக் கொள்ள உரிமையுண்டு.

கொடுத்த பதவி ஆணவத்தைத் தடுத்து, அடக்கத்தை வளர்த்தால் பதவி நிலையாக நிற்கும்.

அடக்கம் அமரருள் உய்க்கும்.

அமரருள் ஒருவனாய பிரம்மன், தான் தோற்றுவித்த உலகு, அழிவுப் பாதையை நோக்கிக் கொண்டிருக்கும் போதுதான், ஆக்கப் பாதையை நோக்கத் தொடங்கினான்.

ஆணவம் அழிய, படைப்புப் பதவியைக் கொடுத்த பகவானை வழிபடலானான். பெருங்காலம் தவம் செய்து வழிபட்டான் பெருமாளை,

இதெல்லாம் நமக்கு எப்படித் தெரியும்?

முக்காலமும் உணர்ந்த முனிபுங்கவர்களுக்குத்தான் தெரியும்.

## விசுவாமித்திரன்:

இராமாயணத்தில் வரும் இந்த ஞானமுனி, 'தேவரோடு இடங்கொள் நான்முகனையும் படைக்கும் பேராற்றல் நிறைந்தவர். பிரம்மனையும் அறிந்தவர்: பெருமாளையும் உணர்ந்தவர்.

'அகம் வேத்மி மகாத்மா நம் ராமம் பராக்கிரமம்' என்பது அவர்தம் கூற்று.

சனகப் பேரரசன் அவையிலே, இராம இலக்குவர்களோடு வீற்றிருக்கின்றார் முனிவர் பெருமான்.

'இருந்த குலக்குமரர் தம்மை இரு கண்ணால் முகந்து அழகு பருக நோக்கி "யார் இவர்கள்" என்று ஆர்வத்தோடு கேட்டான் சனக மன்னன்.

செங்கல் பொடிக் கூறை வெண்பல் தவத்தராய துறவுக்கோலத் தூய முனிவர், இராமபிரான் வரலாற்றை, குலப்பெருமையை முன்னுரையாக்கிக் கொண்டு மொழிகின்றார். இம்மொழியில் வருகின்றது பிரம்மன் அகங்காரம் அடங்குதற்குச் செய்த பெருமாள் வழிபாடு.

முனிவர் பெருமான் மொழியினைக் கேட்போம்.

"பிணி அரங்க, வினை அகலப் பெருங்காலம் தவம்
செய்து,
மணி அரங்கு மணிமுடியாய்! மலரயனே வழிபட்ட,
பணி அரங்கப் பெரும்பாயல் பரஞ்சுடரை யாம் காண
அணி அரங்கம் தந்தானை அறியாதார் அறியாதார்"

(கம். 638: குலமுறை 2)

அருமையான பாடல் :

வாழ்க்கையில் பிணி இருக்கும் இடத்தில் [நோய்] அணி [அழகு] இருக்காது. பிணி, அணியை அகன்றோடச் செய்துவிடும். பிணியைக் கண்டால் போதும் அணிக்கு அவ்வளவு அச்சம்.

பிணியின் போக்குதான் அணியின் ஆக்கமாகும். போக்கும் ஆக்கமும் நிகழும் இடம் ஒன்று உண்டு.

அது பெருமாள் சந்நிதி. பெருமாள் தரிசனத்தால்தான் பிணியின் செலவும் அணியின் வரவும் ஒருசேர நடைபெறும்.

இரண்டும் ஒன்றுக்கு ஒன்று (நோயும் அழகும்) முகம் காட்டாது; முதுகு காட்டும், மனித வாழ்க்கையில்.

அத்தகைய வேறுபட்ட இயல்பினவாய இரண்டும், நேருக்கு நேராகச் சந்திக்க விருப்பம் கொண்டனபோலும்:

அச்சொற்களின் விருப்பம் அறிந்த கவிச் சக்ரவர்த்தி, அச்சொற்கள் இரண்டும் (பிணி, அணி) பிணைந்து கொண்டு விளையாட நல்லதோர் அரங்கம் அமைத்துக் கொடுத்துவிட்டார்.

**அரங்கம் :**

பிணியும் அணியும் அரங்கத்தில் ஆடும் விளையாட்டினைப் பார்த் தவர்கள், கிரிக்கட் போன்ற விளையாட்டு அரங்கினைக் கண்ணெடுத்தும் பார்க்கமாட்டார்கள்.

குழலும் யாழும் இனிமை தருவது, தம்மக்களின் மழலைச் சொல் லைக் கேளாதவர்களுக்குத்தானே!

அணியும் பிணியும் ஆடும் அரங்க அழகை ரசிக்கத் தெரியாதவர் களுக்குத்தான், கிரிக்கட் போன்ற விளையாட்டு அரங்கு.

சேராதன சேர்ந்துள்ளன இங்கு. தம் விளையாட்டை, அனைவரை யும் காணவைப்பதற்கு மணி அடித்து ஒலியையும் எழுப்புகின்றன. மணி [மாணிக்கம்] காட்டி ஒளியையும் காண்பார் பக்கம் திரும்புகின்றன.

ரசிகர்களை தம் அரங்கத்தில் கலந்து நின்று ரசிக்க வைப்பதற்கு அவைகள் செய்யும் பணியை- தொண்டை என்ன என்று வியப்பது?

பிணி, மணி, பணி, அணி இந்த சொற்களை வைத்துக்கொண்டு அரங்கத்தை கவிச்சக்ரவர்த்தி எவ்வளவு, அழகுபடுத்திவிட்டார்.

இனி, அரங்கத்தில் உள்ளே நுழைவோம்.

அரங்கம் என்ற சொல்லே, அழிவு, அழுத்தம், இடம், கருவறை என்ற நாற்பொருளைத் தந்து, பாடலுக்கு நற்சுவை ஊட்டி நிற்கின்றது.

பலபொருள் குறிக்கும் ஒரு சொல்லாய இவ் அரங்கம், கவிச்சக்ர வர்த்தியின் பாடம் மூலம், பயில்வார் அனைவரின் உள் அரங்கத்தில் இடம் பிடித்துக் கொள்கின்றது.

**திருவரங்கம்:**

பிணி (ஆணவமாகிய உயிர்ப் பிணி) அழியவும், ஆணவத்தால்

ஏற்பட்ட தீச்செயல் நீங்கவும், தாமரை மலரில் வீற்றிருக்கும் பிரம்ம தேவன், நீண்ட நெடுங்காலம் தவம்செய்து வழிபட்ட பெருமாள், திரு வரங்கநாதன்.

மணிகள் அழுத்தப் (பதிக்கப் பெற்ற) பட்ட நெடிய முடிதரித்த சனக மன்னனே! கேள்.

தூய்மையான மேலான ஒளிமயமான நாதன். பாம்பையே [ஆதி சேடன்] படுக்கும் இடமாகக் கொண்டு திருக்கண் வளர்கின்றான்.

இத்தகைய ஆதியஞ்சோதியையே இட்சுவாகு மன்னன் தன் இல்லத்தில் ஒரு பக்கத்தில் கருவரையில் வைத்து வழிபாடு செய்தான்.

எம்மைப் போன்ற பிற்காலத்தவரும், கண்டு வழிபாடு செய்யும் படியாக அணிஅரங்கம் தந்தவன் இந்த இராமன் குலத்து முன்னோனா கிய இட்சுவாகுமன்னன். இத்தகைய உயர்ந்த செயலைச் செய்த இட்சு வாகு மன்னனைப் பற்றி அறியாதவர்கள், எதனையும் அறியாத அறிவி லிகள் என்றுதான் கூறவேண்டும்.

விசுவாமித்தர மாமுனிவரின் விளக்கம் இது

இட்சுவாகுமன்னன், பிரம்மனால் வழிபாடு செய்யப்பட்ட பணி அரங்கப் பெருஞ்சாயல் பரஞ்சுடரையே - அரங்கநாதனையே, தன் குல தெய்வமாகக் கொண்டு வழிபாடு செய்து வந்தான்.

அரச பதவியில் இருப்பவர்க்கு ஆணவம் பிணியாகத் தலைதூக்கு வது இயல்பு.

ஆணவப் பிணியை அவ்வப் போது அடக்கி வைத்து அரச கோ

கம்பன் அறநிலை
KAMBAN TRUST
KARAIKUDI- S. RY



லத்து அணியோடு, திகழவேண்டி மன்னன் தன் இல்லத்திலேயே கருவ ரங்கம் செய்து அணி அரங்கனை அமைத்துக் கொண்டான் போலும்!

இக்குலத்து மன்னர்கள் யாவரும் இப்பெருமானையே வழிபடு தெய்வமாக்கிக் கொண்டு வணங்கி வந்துள்ளார்கள்.

இராமபிரான் முடிசூட்டு விழா ஏற்பாட்டிற்கு முதல் நாள், பாம் பணை மேல் பள்ளிகொண்ட இந்தப் பரந்தாமனையே வணங்கியதாக இராமாயணம் கூறுகிறது.

வீடணன் இராமபிரான் முடிசூட்டு விழாவிற்குப் பிறகு, இலங்கை திரும்பும்போது, இந்தப் பெருமானையே பரிசாகப் பெற்றான்.

இலங்கை செல்லும் வழியில் இரண்டு ஆற்றின் நடுவில் வைத்து விட்டரன்.

இப்பொழுது அணி திருவரங்கமாகத் திகழ்கின்றது.

"ஆராத அருளமுதம் பொதிந்த கோயில்
அம்புயத்தோன் அயோத்தி மன்னற்கு அளித்த கோயில்
தோலாத தனிவீரன் தொழுத கோயில்
துணையான வீடணற்குத் துணையாம் கோயில்
சேராத பயன் அனைத்தும் சேர்க்கும் கோயில்
செழுமறையின் முதல் எழுத்துச் சேர்ந்த கோயில்
தீராத வினை அனைத்தும் தீர்க்கும் கோயில்
திருவரங்கம் எனத்திகழும் கோயில்தானே"

என்று, இதன் உண்மையைப் புலப்படுத்துவார் வேதாந்த தேசிகர்.
(தனி வீரன் - இராமன்) (அம்புயத்தோன் - பிரம்மதேவன்)

'அரங்கனைத் தொழுது, ஆணவப் பிணி தீர்ந்து அணி பெற்றுத் திகழுங்கள்' என இப்பாடல் நமக்கு உணர்த்துகிறது.

'யாம் காண, அணி அரங்கம் தந்தான்' யாம் காண, என்பது, ஞான முனியாகிய விசுவாமித்திரப் பெருமான் உணர்ந்து சொன்ன ஒரு சொல்.

படைப்புக் கடவுளின் ஆணவத்தை அழித்த அரங்கம், இட்சுவாக மன்னன் குலத்தினர்க்கு, பதவியால் வரும் ஆணவத்தை அடக்கிக் கொண்டிருந்தது.

எங்களைப் போன்ற கல்வியாலும், தவத்தாலும் ஞானத்தாலும் வளர்ந்து கொண்டே செல்கின்ற ஆணவப் பிணியினர்க்கு இந்த அரங்கத்தை அணியாகத் தந்தானே இட்சுவாகு மன்னன். அவனல்லவா பெருவள்ளல்!

பதவி போனால் ஆணவப் பிணி சொல்லிக் கொள்ளாமலே போய்விடும். பதவியும் பணமும் போகக் கூடியது. அதன் காரணமாக வந்த ஆணவமும் போகும்.

ஆனால் எங்கள் ஆணவப் பிணியோ போகவே போகாது. கல்வி, தவம், ஞானம் போவதில்லையே! அவைகள் வளர்ச்சிக்குரியன. அதனால், அதன் காரணமாக வளர்ந்த ஆணவப் பிணியும் வளருமே அன்றி குறைவதில்லை.

அதனை அகற்ற அரங்கனை வழிபடுவதுதான் சரியான வழி. தசரதனுடைய பேரவையில், தான் பெற்ற தவத்தால் ஆணவத்தோடு நின்ற விசுவாமித்திரரை, உணர்ந்து பேச வைக்கத் தேர்ந்த இடம், சனகனுடைய மிதிலைப் பேரவை. 'யாம் காண' என்ற தொடர் கம்பர் கவிச் சக்ரவர்த்திதான் என்பதை பறை சாற்றிக் கொண்டிருக்கிறது. எக்காலத்தினரும், பிணி அகல, அரங்கம் தொழுது அணி [அழகு] பெறலாம்.

ஸ்ரீ :

# 3. தோளும் தாளும்

மிதிலை:

மிதிலாபுரியில் மாப்பிள்ளை அழைப்பு.

மாப்பிள்ளையாக வருபவன் யார்என்று அந்நகரத்து மக்களுக்குத் தெரியாது. அவனுடைய பூர்வாசிரமத்தைப் புரிந்து கொண்டது அம் மிதிலை மாநகர்.

அதனால், மாமுனிவரின் பின்னால், தம்பி பின்தொடர, தன்னிச்சையாக வரும் இராமபிரானுக்கு, முதல் வரவேற்பு நல்கியது அந்த நகரம்.

தன்னிடம் வரும் அப்பெருமானை, யார் என்று தான் உணர்ந்ததனை, "வா! வா! விரைவில் வா" என்று தன் கைகளை உயரமாக நீட்டி அழைப்பதன் மூலம் காட்டிவிட்டது.

'நீ யார்?' என்பது எனக்குத் தெரியும்! பிரிந்தவளைத் தேடிக் கொண்டிருக்கின்றாய். பாற்கடல் பள்ளியில் யாரோடு கலந்திருந்தாயோ? அந்தப் பிராட்டி இங்குதான் இருக்கின்றாள்.

பாற்கடலில் உன் கலவிக்குரியவளாய் இருந்த அந்தப் பூமகளும் நீயும் ஏன் பிரிந்தீர்கள்? 'இருவரும் எங்கெங்கே, போய்த் தோன்றுவது? பிறகு எப்படி யார் மூலம் சேர்வது?' என்பதை எல்லாம் திட்டம் இட்டுச் செய்துள்ளீர்கள்.

'கருங்கடல் பள்ளியின் கலவி நீங்கிப் போய் பிரிந்த நீங்கள்' சேரும் இடம் இதுதான். இவ்வுண்மை, இத்தீர்க்க தரிசனம், இங்கு வாழும் மக்களுக்கு யாருக்குப் புலனாகப் போகின்றது.

உன் நாடகத்தை உணர்ந்தவர்கள் யாரும் இல்லை. நாடகக் காட்சியைக் காணும் புறக்கண் படைத்தவர்களுக்கு, உன் உண்மைத் தோற்றம் எவ்வாறு விளங்கப் போகிறது?

முகத்திலே கண்கொண்டு பார்க்கின்ற மூடர்களைக் கொண்டது தானே இவ்வுலகம்! உலகத்தினர் முகக் கண் பார்வையோடு நின்றால் தானே உன் நாடகமும் வெற்றியடையும்!

அகக்கண் கொண்டு உன்னை நோக்கி, நோக்கி உன் உண்மைக் கோலத்தை உணர்ந்து, 'அகம் வேத்மி' என்று, உன் நாடகத் தந்தை (தசரதன்) யிடம் சொல்லிவிட்டு, உன்னை அழைத்துக் கொண்டு வரும் விசுவாமாத்திர மாமுனிவரின் எண்ணத்தையும் நான் புரிந்துகொண்டு விட்டேன்.

## மெய்ம்மை:

இராமா! நான் எவ்வளவு பெரிய தவம் செய்திருக்கின்றேன் என்ற மெய்ம்மை இப்போது எனக்குத் தெரிகின்றது.

தவம் செய்தவர்க்கு, தன்னிகரில்லாப் பெருமை தானே தேடிக் கொண்டு வரும்.

என்னைத் தேடி வந்த பெருமையைச் சொல்கின்றேன்; கேள்; இராமா.

செந்தாமரைப் பொகுட்டில் செம்மாந்து வீற்றிருக்கும் நந்தா விளக்கான திருமகள்தானே, உன் மார்பில் 'அகல கில்லேன் இறையும்' என்று வாழ்கின்றவள்.

அந்தத் திருமகள், நீ நடிக்க இருக்கும் உன் நாடகத்திற்கு ஒத்துழைப்பு நல்கத் திருவுள்ளம் கொண்டு, உன்னைப் பிரிந்தாள்.

அப்படிப் பிரிந்தவள், தாமரை மலரினும், உன் மார்பினும் உயர்ந்தது என்ற எண்ணத்தினால் அல்லவா என்னைப் பிறப்பிடமாக்கிக் கொண்டாள்!

திருமகளால் வாசஸ்தலமாகக் கொள்ளப்பட்ட என்னினும் உயர்ந்தவர் யார்? என் தவத்தின் மகிமைக்கு இது போதாது!

'யான் செய்மாதவத்தின் செய்யவள்
இருந்தாள் - இங்கு'
இராமா! மற்றோர் மெய்ம்மை!

யான் செய்த தவம், திருமகள் உன்னைப் பிரித்துவிட்டு என்னிடம் சேர்ந்தாள்.

அந்த தவத்திற்குப் பயன் அளிப்பது, உன் கையில்தான் இருக்கிறது இராமா!

பிரிந்திருக்கும் உங்கள் இருவரையும் சேர்த்து வைக்கும் நிலை ஏற்பட்டால், அதுதான் இராமா! என் தவப் பயன். நான் அந்த நற்பயன் பெறுவதற்கு விரைவில் வா இராமா!

பிரிந்தவர்களாகிய நீங்கள் இருவரும் கூடிவிட்டால், நான் அதற்குப் பிறகு ஒன்றும் பேசமாட்டேன் சுவாமி!

இராமா! 'பிரிந்தவர் கூடினால் பேசவும் வேண்டுமா! உங்கள் இருவரிடத்திலும் பேச்சுக்கு வேலையில்லை! உங்கள் இருவரையும் கண்ணாரக்கண்டு தரிசிப்பவர்க்கும் பேச்சுக்கு இடமில்லை. உங்களைக்கா

ணும் வரை தான் வாய் உளறிக் கொண்டிருக்கும். கண்ட பின் ஞானம் பிறந்து விடும்! மோனம் புகுந்து விடும்.

இதெல்லாம் மெய்ம்மைதானே இராமா?

உன் நாடக வேடம் கலையும் படியாக, நான் ஏதாவது உளறியி ருந்தால் மன்னித்துவிடு இராமா!

நான் பேசுவதெல்லாம் உனக்கும் எனக்கும் தெரிந்த இரகசியம் தான். இரகசியம் இங்குள்ளவர்க்கு [மிதிலைமக்கள்] யார்க்கும் தெரியாது.

ஆனால், உன்னை அழைத்துக் கொண்டு வந்துள்ள விசுவாமித் திர மாமுனிவர்க்கு, எல்லா ரகசியமும் தெரியும் உலக நல்வாழ்விற்காகத் தான், நீங்கள் இருவரும் பிரிந்து வேடம் தரித்துள்ளீர்கள் என்பதை உணர்ந்ததால்தான், முனிவர் பெருமான் உங்களைச் சேர்ப்பிப்பதற்கு வருகின்றார்.

சேர்ப்பித்த வேலை முடிந்ததும், அவர் யாரிடமும் சொல்லிக் கொள்ளாமலேயே, புறப்பட்டுப்போய்விடுவார். நல்லவர்க்கு அடையா ளம் அதுதானே!

## சீதாராமன் :

என்னமோ சொல்ல வந்து எங்கேயோ போய்விட்டேன் இராமா! இந்த முனிவர் பக்கம் தலை காட்டினாலே இப்படித்தான்! மறக்கடித்து விடுவார்கள். உலக ஆசையை மறக்கடிக்கட்டும்! வேண்டாம் என்று சொல்லவில்லை. ஆனால் உன்னிடம் பேச எண்ணியதையே மறக்க வைத்து, திசை திருப்பிவிட்டாரே! போகட்டும்!

அவர் தான், வந்த வேலை முடிந்ததும் திசை திரும்ப வேண்டும்.

இராமா! பேச வேண்டியது நினைவுக்கு வந்துவிட்டது. நீ இப்போது, தசரத ராமனாகத்தானே இங்கு வருகின்றாய்! இல்லை! ஒரு வேளை கோதண்ட ராமனாக வருவதாகவும் வைத்துக் கொள்ளலாம்.

இங்கு வந்த நீ, இதை விட்டு, புறப்பட்ட இடத்திற்குத் திரும்பி தானே ஆகவேண்டும். வந்தவர்கள், வேலை முடிந்ததும் புறப்படாமல் இருக்கமுடியாது. வருதலும் போதலும் இவ்வுலகியற்கை. வரும்போது இன்புறுதலும், போகும்போது துன்புறுதலும், ஞானிகளுக்கு இல்லை.

வந்த இடத்திலிருந்து, எதைப் பெற்றுக் கொள்ள வேண்டுமோ, அந்த நல்லதைப் பெற்றுக் கொண்டுவிட்டால், ஆனந்தமாகத் திரும்பி விடலாம்.

இராமா! நான் எதையோ சொல்லவில்லை! இந்த மண்ணுலகின் இயல்பினைச் சொன்னேன். நீயும் இந்த மண்ணுலக நாடக மேடைக்குத் தானே வந்திருக்கிறாய்! மேடையில் நடிப்பு பிரமாதமாகத்தான் இருக்கும். உன் மெய்ம்மை வெளிப்படாது.

இதைவிட்டு நீ புறப்படும் போது சீதாராமனாகச் செல்ல வேண்டும். அப்போது தான் நீ ஜெயராமனாகவும் விளங்கமுடியும்.

சீதாராமனாக, நீ அயோத்திக்கு மீளும் வழியிலேயே, அரச வம்சத்தையே ஒழிப்பதற்குக் கங்கணம் கட்டிக் கொண்டுள்ள பரசுராமனை ஒரே அம்பில் வென்று ஜெயராமன், என்பதைக் காட்டப் போகின்றாய் என்பது இப்போது யாருக்குத் தெரியப் போகிறது.

## போகமும் யோகமும் :

இராமா! அயோத்தியினின்றும், உன் பெற்றோர்களிடம் விடை பெற்றுக்கொண்டு வரும் போது, இந்த நகரத்து மாப்பிள்ளை ஆவாய்

என்பதை யார்க்கும் காட்டிக் கொள்ளாமலேயே வந்து விட்டாய். என்ன அருமையான நாடகம்!

நாடகத்தை நான் நன்கு புரிந்து கொண்டதால் தான், நாடகத் திற்கு நல்ல ஒத்துழைப்பு நல்க வேண்டி 'விரைவில் (ஒல்கல) வா! வா! என்று ஆர்வத்தோடும் அன்போடும் அழைக்கின்றேன்.

செந்தாமரைக் கண்ணனும் செய்யவளும் ஆக நீங்கள் மண வறையில் ஒன்றியிருக்கும் போது, அக்காட்சி, காணும் மக்கட்கு எத்த கைய பேரின்பத்தை நல்கிக் கொண்டிருக்கும்!

உங்கள் சேர்க்கை, 'போகமும் யோகமும்' ஒன்றியிருப்பதையல் லவா காட்டும்!

போகமும் யோகமும் வெவ்வேறிடத்தின அயோத்தியும் மிதிலையு மாக நீங்களும் வெவ்வேறிடத்தினர்தானே!

போகமும் வேண்டும்: யோகமும் வேண்டும்.

உடல் உறுப்புகள் தொடர்பால் ஏற்படும் இன்பம் போகம்,

உள்ளதாய ஆன்மத் தொடர்பால் ஏற்படும் ஆனந்தம் யோகம்.

போகமே நிறைந்த இடம் எது? அது வானகம்.

யோகமே நிறைந்து கிடக்கும் இடம் எது? அது கானகம்.

போகமும் யோகமும் கலந்து வாழும் இடம் நகரம்.

இம் மண்ணகத்தார், அதனை நரகமாக்கவும் கூடும். இம்மண்ண கத்தாரைத் திருத்துவதற்குத்தானே, நீங்கள் இருவரும் அவதாரம் செய் துள்ளீர்கள்.

ஆகவே, உங்கள் இருவரின் ஒன்றிய காட்சி, போகமும் யோகமும் ஒன்றியிருக்கும் ஒரு நிலையினைக் காட்டுவதாகவே மக்கள் கண்டு மனம் மகிழ்வர்.

பெருமானே! நான் சொல்வதெல்லாம்-நினைப்பதெல்லாம் மெய்ம்மைதானே!

ஏன்?

நீ, பொய்படை உள்ளாத்தார்க்குப் புலப்படப் புண்ணியன் அல்லவா?

எனக்கு நீ புலப்பட்டிருப்பதால், நான் பொய்யில்லா மெய்யறிவினனாக இருக்கிறேன் என்று உணர்கின்றேன்.

இராமா! ஒன்றை அழுத்தமாகச் சொல்லுகின்றேன். உன்னிடம் மட்டும் தான்!

உங்கள் கலவி மட்டும்தான் இங்கு. உங்களைச் சேர்த்து வைக்கும் புண்ணியம்தான் எனக்கு!

உங்களைப் பிரித்து வைக்கும் பாவத்தை, பஞ்சவடிக்குத்தான் கொடுக்கப் போகின்றாய். வேறு யாருக்குத் தெரியப் போகிறது?

## கலவியும் புலவியும் :

என்னிடத்தில் ஏற்படும் உங்கள் கலவிக்குப் பின்னால் ஒரு புலவி வரும், கலவியும் புலவியும்தானே காதலர் வாழ்க்கைக்கு இன்பம் நல்கும்!

பஞ்சவடி, உங்கள் இருவரையும் பிரிப்பதற்குத் தயாராகிக் கொண்டிருக்கிறது. இந்தத் தயாரிப்பு இங்கு யாவர்க்கும் கொஞ்சம் கூடத் தெரியாது இராமா! எதிர்கால நிகழ்ச்சி எப்படி அமையும் என்பது யாருக்குத் தெரியும்!

அது உனக்கு வெளிச்சம். எனக்கும் எதிர்காலம் காணும் கண்ணாடி உண்டு. ஆனால் யார்க்கும் சொல்லி விடமாட்டேன். ஐயம் கொள்ளற்க.

என்னிடத்துக் கலவி, இராமாவதாரம் நோக்கத்திற்கு எவ்வளவு முக்கியமோ, அதனினும் முக்கியத்துவம் நிறைந்தது பஞ்சவடி இடத்து நடைபெறும் பிரிவு (புலவி).

அந்தப் பிரிவு உங்கள் வாழ்க்கையில் ஒரு புலவிதான் (சிறு ஊடல்) என்பது நாடகம் நடிக்க வந்துள்ள உங்களுக்குத்தான் தெரியும்.

மற்றைய காண்போர் எல்லாம் அப்பிரிவை நினைத்து நினைத்து தேம்பித் தேம்பி அழுவர்.

காண்போரை, சிரிக்கவும் அழவும் வைக்கும் போதுதான் நடிப்பு உச்சம் பெறுகிறது.

இந்த உண்மையை எல்லாம் யார் எனக்குச் சொன்னார்கள் என்று யோசிக்கின்றாயா?

பேசாதனவற்றையெல்லாம் பேச வைப்பதும், காணும் கண்ணற்றனவற்றை எல்லாம் காணவைப்பதும். உணரும் உள்ளமே இல்லாதனவற்றை உணர வைப்பதும், உன் பூர்வாசிரம நிலையாகிய கடவுள் தோற்றம்தானே!

## கடவுளும் கவிஞரும் :

கடவுள் செய்யும் வேலையை, அவரது அருளில் கலந்து ஆன்மீக உணர்வு பெற்ற கவிஞர்களும், உயிரற்ற எங்களுக்கு உயிர் கொடுத்து, காணவேண்டியதைக் காண்பித்து, பேச வேண்டிய உண்மைக் கருத்துக்களை-தத்துவப் பேருண்மையைப் பேச வைத்து விடுவார்கள்.

இராமா! இப்படி இந்த இறை தத்துவத்தை உணர்ந்து, உன்னை, விரைவில் வரும்படியாக என்னை அழைக்க வைத்தது, ஆரியம் நன்குணர்ந்து, தமிழின் ஆழம் அளந்து கண்ட கவிஞர் பெருமான் கம்ப நாட்டாழ்வார்.

அவர், உன்னை அழைப்பதற்கு, எனக்கு நீண்ட கைகளை அளித்துள்ளார். பாவம், உண்மை தெரியாதவர்கள் அதனை 'செழுமணிக் கொடிகன்' என்று தான் சொல்லுவார்கள்.

உயரமான மதில் கொடிகள், உன்னை அழைக்கும் கைகளாக்கியமைக்கு, யாருக்கு நன்றி சொல்வது?

கவிச்சக்கரவர்த்தி தந்த மிதிலைக் காட்சி:

"மையறு மலரின் நீங்கி,
யான்செய் மாதவத்தின் வந்து,
செய்யவள் இருந்தாள்":என்று,
செழுமணிக் கொடிகள் என்றும்
கைகளை நீட்டி, அந்தக்
கடிநகர், கமலச் செங்கன்
ஐயனை 'ஒல்லை வா' என்று
அழைப்பது போன்றது அம்மா"

கம்-480 மிதிலைக் காட்சி-1.

கவிஞர் பெருமானுக்கு. இராமபிரானிடம் உள்ள ஈடுபாட்டைக் காட்டும் பலபாடுகளுள் இதுவும் ஒன்று. எங்கு 'அம்மா' என்ற வியப்பு தரும் இடைச்சொல் (வியப்பிடைச் சொல்) இறுதியில் அமைகின்றதோ, அங்கு கவிஞர் மனம், ஒன்றிவிடுவதைக் காணலாம்.

கமலச் செங்கன் ஐயன் (தாமரை போன்ற சிவந்த மலர்ந்த கண்களை உடைய இராமன்) வரவேற்கப்படுபவன். வரவேற்பது கடிநகர். [காவலை உடைய மிதிலை நகர்] வரவேற்புக்குரிய சொல் 'ஒல்லை வா' [விரைவாக வருக] என்ற அழைப்புச் சொல் அழைப்புக்குரிய செயல், செழுமணிக் கொடிகளின் காற்றசைவு. [இதுதான் நகருக்குரிய கைகள்] அழைப்புக்குக் காரணம் இராமபிரானுக்குரிய திருமகள் (செய்யவள்] மிதிலையில் இருக்கிறாள்.

இது செய்தி. உள்ளதை உள்ளபடியே சொல்வது கவிஞன் வேலையல்ல! அது வரலாற்று ஆசிரியனுக்குரியது.

உள்ள ஒன்றை-நடக்கும் ஒரு செயலை அடிப்படையாக்கிக் கொண்டு, கற்பனைமெருகூட்டி, கற்பார் உள்ளத்தில் சுவையாகத் தங்க வைப்பதுதான் கவிஞர்களின் கைவண்ணம்.

'யான் செய் மாதவத்தின் வந்து செய்யவள் இருந்தாள்' என்று, நகரை நினைக்க வைத்ததும், செழுமணிக் கொடிகளைக் கைகளாக நீட்ட வைத்ததும், அதன் காற்றசைவை, 'ஒல்லை வா' என்று அழைக்க வைத்ததும், புலவர் பெருமான் செய்த கவிதைச் செயல்.

இந்தக் கவிதையில் அமைக்கப்பட்டுள்ள 'ஒல்லை வா' என்ற தொடர் ஆழ்ந்த பொருளுடைய தொன்றாகும்.

இராமா! நீ மாப்பிள்ளையாக, இந்நகரத்தில் உலா வரப் போகிறாய். அப்போது, உன்புறத்தில், உள்ள தோளையும் தாளையும் தடக்கையும் மட்டுமே காணப் போகின்றார்கள்.

அதன் உண்மை வடிவத்தை-மெய்மையை எங்கு காணப் போகிறார்கள்! ஏதோ வெளிப்பார்வையில்தான் நிற்பார்கள்; 'ஒல்லை வா' உண்மையை உணர்பவர்கள் சிலரேனும் இருப்பார்கள். அவர்களும் மாறுவதற்கு முன்னால் இங்கு வந்து மாப்பிள்ளை கோலத்தின் மூலம், மாமூல உண்மையை உணர்த்துவாய். கம்பன் காட்டும் உணர்ச்சி இது

## செய்யுள் அணி :

'யான் செய் மாதவத்தின் வந்து செய்யவள்இருந்தாள்' என்பதும் 'ஒல்லை வா' என்பதும், புலவன் தன் குறிப்பை, இயற்கையான ஒன்றின் மேல் ஏற்றினதால், தற்குறிப்பேற்றணி வந்து அமைந்து கொள்கிறது.

செழுமணிக் கொடிகளை, கைகளாக்கியதால் உருவக அணி, உள்நுழைத்து கொள்கின்றது. உவமை அணியின் செறிவுதான் உருவகம். உவமையைக் காட்டிலும், உருவகத்தையே, பெரும் புலவர்கள் எளிமை யாக்கிக் கொள்வர்.

'கவிச் சக்ரவர்த்தி' இரண்டு அணிகளை இந்தக் கவிதை நாய கிக்கு அணிவித்து, அணி செய்ததால் போலும், இந்த நகர் தன்தவத் தை அறிவித்தும், தவப்பயனை வேண்டியும் நிற்கின்றது!

## உலாவியல்:

நகரின் அழைப்பு கவிஞர்க்கு மட்டும் தெரிந்தது.

இனி, யாவரும் தெரிந்து கொள்ளும்படியாக, ஒரு பிரமாதமான மாப்பிள்ளை அழைப்பு நடைபெறப் போகிறது. இதனைக் கம்பர் பெரு மான் 'உலாவியல்' என்று பெயரிட்டழைப்பார்.

உலகத்தார் உரைப்பதை, எப்படிச் சொல்ல வேண்டும் என்பதற்கு ஓர் கவிமரபு உண்டே? அம்மரபைப் பின்பற்றி 'மாப்பிள்ளை அழைப்பை 'உலாவியல்' ஆக்கினார் புலவர் பெருமான்.

எந்தக் கவிஞரிடத்திலிருந்து இந்த மூலக்கதையை எடுத்துக் கொண்டாரோ, அந்த ஆதிகவி, இந்தப் பகுதியைக் காட்டவில்லை. அவர் சொல்லாததை, இவர் ஏன் சொல்கின்றார்?

**காரணம்:**

'மாப்பிள்ளை அழைப்பு' தமிழ் நாட்டுத்திருமணச் சடங்குகளில் ஒன்று. சீதா, இராமர் கல்யாணமே தமிழ் நாட்டு முறையில்தான் கம்பர் நடத்துகின்றார். அதுவும் தமிழ் அகத்திணை முறை பிறழாமல் அமைக்கின்றார். ஆகவே இந்நிகழ்ச்சி இன்றியமையாதது ஆகின்றது.

மற்றொன்று: கம்பர் வெறும் கதை சொல்ல வந்தவர் அல்ல! கதையைக் காப்பியமாக்குபவர். காப்பியத்துள், தலைவன் உலாவரும் காட்சி ஒன்று அமைய வேண்டும். அதற்கு ஏற்றஇடம் இதுவே.

திருத்தக்க தேவர் தம் சிந்தாமணியில், சீவகன்-காப்பியத்தின் தலைவனை உலாவிடுகின்றார்.

தமக்கு வழிகாட்டியாய் அமைந்த தேவரை அப்படியே பின்பற்றி கம்ப நாட்டாழ்வாரும் இராமன் உலாக் காட்சியை, அழகாக அமைத்துள்ளார்.

**உலாக் காட்சி:**

இக்காட்சியில் அமைந்த கற்பனைச் செறிவான பாடல்கள் -54ல் ஒன்றுதான் 'தோள் கண்டார்' என்பது.

தோள்கண்டார் தோளே கண்டார்:
    தொடு கழல் கமலம் அன்ன
தாள்கண்டார் தாளே கண்டார்:
    தடக்கை கண்டாரும் அஃதே
வாள் கொண்ட கண்ணார் யாரே
    வடிவினை முடியக் கண்டார்?
ஊழ்கொண்ட சமயத்து அன்னான்
    உருவு கண்டாரை ஒத்தார்.

(கம். 1082. உலா-18)

இக் கவிதை தன்னைக் காண்பாரை ஆழமாகக் காணவைக்கிறது எப்படி நுண்மாண் நுழைபுலம் கொண்டு, உள் நுழைத்தாலும், 'முழுமைக் கருத்தையும் உணர்ந்தோம்' என்ற மனநிறைவினைப் பெறமுடியாதபடி, ரசிகர்களைத் தன்பால் அணையவைத்து, அப்போதைக்கு அப்போது ஆரா அமுதினை நல்கும் அழகியதோர்க் கவிதை இது.

கருணையங்கோயிலுள் இருக்கும் கண்ணன், இப்போது அழியா அழகனாய் தேரினுள் வீற்றிருந்து, மிதிலை மாநகரின் தெருவில் பவனி-[உலா] வருகின்றான் [உலா-ஊர் கோலம்].

கண்கொள்ளா இக்காட்சியைக் காண நகரமக்கள் அனைவரும் தான் திரண்டு வந்திருப்பார்கள். காண்பார் தம் மனப்பக்குவ நிலைக் கேற்ப காணப்படுபவன் வெவ்வேறு தோற்றம் உறுபவனாவான்.

அனைத்து மக்களது மன இயல்பையும் காட்ட, கம்பர் மனம், இடம் கொடுக்கவில்லை.

உலாக்காட்சியைக்காண, தம் காவியத்தில் எவருக்கு உரிமை கொடுத்துள்ளார் என்பதை அவரே சொல்லக் கேட்போம்,

> "பேதையார் முதல்கடைப் பேரிளம் பெண்கள்தாம்
> ஏதியார் மாரவேள் ஏவ, வந்து எய்தினர்:
> ஆதிவானவர் பிரான் அணுகலால், அணிகொள்கார்-
> ஓதியார் வீதிவாய் உற்றவாறு உரைசெய்வாம்".

பேதை முதல் பேரிளம் பெண் வரையுள்ள பருவப் பெண்கள், இராமனைக் காண வந்து வீதியில் நெருங்கி உள்ளார்கள்.

**காண்பவர்:**

"பேதை, பெதும்பை, மங்கை, மடந்தை, அரிவை, தெரிவை, பேரிளம் பெண்" என்பவர்கள்தான் அந்த ஏழு பருவத்தினர்.

வயதிற்கேற்ப பருவம் மாறுகிறது. பருவத்திற்கேற்ப உடல் உருவத் தோற்றம் ஏற்றம் பெறுகிறது. உடலோடு இயைந்த உள்ளமும், பருவத்திற்கேற்ற பக்குவத்தை அடைகின்றது. இது இயற்கை அமைப்பு.

இயற்கை அமைப்புக்குட்பட்ட ஏழு வகைப் பருவத்தினரும் 'மாரவேள் ஏவ, வந்து எய்தினார்' என்பது கவிக்கூற்று.

மன்மதன் ஆணைக்குட்பட்டு வரும் மகளிர்கள், காணப்படுபொருளை, எத்தகைய கண்கொண்டு காண்பார்கள் என்பதை, உலாக் காட்சி தொடங்கும் முன்பே, நம்மை ஊகிக்க வைத்து விடுகின்றார் கம்பர்.

அதேசமயம், தேரில் வருபவன் யார் என்பதையும் உணர்ந்து கொள்ளுங்கள் என்று, சொல்லாமற் சொல்பவராய், 'ஆதி வானவர் பிரான்' எனக் குறிப்பிட்டுவிட்டார்.

யாவர்க்கும் முதன்மையானவன்; தேவர்கட்கெல்லாம் தலைவன் அந்த திருமால்தான் இராம வேடத்தில் தேர்மீது அமர்ந்துள்ளான்.

இப்போது காண்போம் யார் யார் எப்படிக் காண்கிறார்கள் என்று?

மானினம் வருகிறதோ? மயிலினம் திரிகிறதோ? மீனினம் மிளிர்கின்றதோ? மின்னினம் மிடைகின்றனவோ? என்ற ஐயப்படியாக, மகளிர்கள் வீதிவாய் வந்து மொய்த்தனர்.

இராமபிரான் நிறமும் கருமை. காண வந்த மகளிர்கள் கண்களும் கருமை. இதனைக் கண்ட கவிச் சக்ரவர்த்திக்கே ஓர் ஐயம் வந்து விட்டது.

பஞ்சனி, விரலினார்தம் படைநெடுங்
    கண்கள் எல்லாம்
செஞ்சவே ஐயன் மெய்யில் கருமையைச்
    சேர்ந்த வோதாம்?

மஞ்சன மேனியான் தன் மணிநிறம்,
மாத ரார்தம்
அஞ்சன நோக்கம் பார்க்க, இருண்ட தோ?
அறகி லோமால்.''

'இம் மகளிரின் கண்கள் எல்லாம் ஒன்று திரண்டு, தம் கருமை நிறத்தை ஒன்றுபட்ட பார்வை மூலம் இராமபிரான் திருமேனியில் சேர்த்து விட்டனவா? அல்லது, அப்பிரானது மணிநிறம், மகளிர்களின் கண்களில் ஒட்டிக் கொண்டனவா? எனக்கு ஒன்றும் புரியவில்லையே என்று கை விரிக்கின்றார் கவிச்சக்ரவர்த்தி.

காண்பானும் காணப்படு பொருளும் ஒரே நிலை எய்தும் இடத்தில், ஜீவ பரமாத்ம ஐக்கியம் ஏற்பட்டுவிடும். அப்பெருநிலையினை விவரிக்கும் ஆற்றல் சொற்களுக்கு ஏது!

காண்பார் ஒவ்வொருவரும் முந்திக்கொண்டு செல்கின்றனர். சென்றவரில் ஒருவர் கூட, இராமபிரானது முழுவடிவத்தையும் கண்டவர் இல்லை. ஏன்?

## தோள்:

சிலர், பெருமானை மேல்நோக்கிப் பார்த்தனர். அவர்களது கண்கள், அவனுடைய திருத்தோள்களின் மேல் பதிந்தன.

பதிந்த கண்களைத் தம் வசப்படுத்திக் கொண்டுவிட்டன தோள்கள். திருத் தோள்களின் அழகு, தம் பக்கம் சேர்ந்த கண்களை, வேறோர் பக்கம் திரும்ப விடாதபடி தடுத்துவிட்டன.

ஒன்றைப் பார்த்தால், அதன் முழுமையும் கண்டு முடித்தால் தானே, அதனின்றும் வெளிவர முடியும்.

தோள் கண்டார் தோளே கண்டார்.

தோளின் அழகைக் கண்டவர்கள், அந்தத் தோளையே கண்டு கொண்டிருந்தார்கள். பார்த்த கண்ணை ஈர்கிலா- (இழுக்க இயலாத- திருப்ப முடியாத) நிலையினராயினர், முதன்முதல் திருத் தோளின் அழ கில் ஈடுபட்டுள்ளவர்கள்.

## தாள்:

இன்னும் சிலர் 'இந்தப் பெருமான், இந்நகருக்கு மாப்பிள்ளை யாக வருவதற்கு உதவியது கால்கள் தாமே' என எண்ணி, திருத்தாள் களைக் காண முற்பட்டார்கள். தோள்கள் செய்த வேலையையே, தாள் களும் செய்துவிட்டன தம் பக்கம் வந்த கண்களை, மேல் நோக்க முடி யாதபடி, தம் அழகால் கவர்ந்து இழுத்து வைத்துக்கொண்டன தாள்கள்.

அதனால்,

தாள் கண்டார் **தாளே** கண்டார்.

தோளினும் தாளுக்கு ஓர் ஏற்றம் உள்ளது.

காணும் கண்களும் மலர் போன்றவை. காணப்படுபொருளாய தாள்களும் மலரை ஒத்தன. இரண்டும் ஒன்று போல்வன. பிரியுமா?

''தொடுகழல் கமலம் அன்ன தாள்கள்''

வீரக்கழல்கள் தொடுக்கப் பெற்றன: தாமரை மலரை நிறத்தாலும், மென் மையாலும் ஒத்தன.

இத்தகைய திருத்தாள்களின் அழகில் வீழ்ந்த கண்கள் எவ்வாறு மீளமுடியும். **தாளே** கண்டார்.

தாளையே கண்டு கொண்டிருந்தனர். முதன் முதல் திருப்பாதம் பக்கம் கண்களைத் திருப்பியவர்கள்.

## தடக்கை:

தோளுக்கும் தாளுக்கும் இடையில், நீண்டு தொங்கும் தடக்கைகளைக் கண்டவர்கள் நிலை என்ன! அவர்களும், பெரியதிருக்கரங்களின் அழகில், தம் கண்களைப் பறிகொடுத்தவர்களே.

இம்முக்கண்ணர்களும், இராமபிரானது ஒவ்வோர் அவயவ அழகை மட்டுமே அனுபவித்தனர்.

அதனால், தாம் கண்ட அந்த அனுபவத்தால், அத்தலைவனை அந்தந்த அவயமே என மதிப்பிட்டுக்கொள்கின்றனர்.

கண்டவர் யாவரும் வாள்கொண்ட கண்ணினர்தான் - கூர்மையிலும், நீளத்திலும் வாளுக்குச்சமமான கண்களால்தான் கண்டனர்.

ஆனால், யாரும் காப்பியத் தலைவன் வடிவினை முழுவதுமாகக் கண்டவரைக் காணமுடியாது.

'யாரே வடிவினை முடிய'க் கண்டார்'.

மிதிலையில், காவிய நாயகனையும் தேரில் அமர்த்தி உலவ விட்டார்'. காரிகையர்தம் கண்களையும் தேரினுள் உலவ விட்டார்; தம் கற்பனைத் தேரில் கவிதைத் தேவியையும் உலவ விட்டுள்ளார் கவிச்சக்ரவர்த்தி.

இந்த உலாக்காட்சி நிகழ்ச்சிகளை நாம் நேரில் கண்டதில்லை. காணாத நமக்கு, அதனைக் காண்பிப்பதற்கு, கவிஞர்கள் ஓர் முறையைக் கையாள்கின்றார்கள்.

நம் எதனைக் கண்டிருக்கின்றோமோ, அதன்மூலம், காணாத ஒன்றை எளிமையாகக் காண்பித்து விடுவார்கள். நற்கவிஞர்களுக்கெல்லாம், இந்த உவமை என்பது, அவர்தம் வலக்கையாக அமைந்து, கவிதைத் தேவியை, யாவரும் வியக்கும் வண்ணம் அணி (அழகு) செய்து விடுகின்றது.

**உவமை :**

கவிஞர் பெருமான், இங்கு கையாண்டுள்ள உவமை வெகு அற்பு தமானது. உவமையை, உவமேயத்தை விளக்கிக் காட்டுதற்கு மட்டும் பயன்படுத்துபவர் சாதாரணக் கவிஞர்கள்.

ஆனால், கவிதைத் தேவிக்கு அணி செய்யக்கொண்டு வரும் உவமை மூலம். உலகுக்கு ஓர் தத்துவத்தையும் உணர்த்துபவர் கவிச்சக்கரவர்த்தி.

கம்பர், இறைத்தத்துவத்தை- சமயப் பேருண்மையை, கதை நிகழ்ச்சியில், வாய்க்கும் சமயத்தை எல்லாம் நன்கு பயன்படுத்திக்கொள்பவர்.

இறைவன் ஒருவனே, அவனுக்கு. வடிவங்கள் பலப்பல. இவ்வளவு உருவங்கள் வேண்டுமா! மனித உருவத்தில் எத்தனை விதமான உள்ளங்கள் உண்டோ, அவ்வளவு உருவங்கள் அவனுக்கும்.

உடலைத்தங்கும் (இறை - தங்குதல்) இடமாகக் கொண்ட உள்ளம், எங்கும் தங்கியுள்ள அவனை, உருவம் அமைத்துத்தானே காண விரும்பும்!

மனித உள்ளங்களின் இறை உணர்வைப் பூர்த்தி செய்யத் தோன்றியவைகளே சமயங்கள். எல்லாச் சமயங்களும் மக்களை, இறைவன் பால் அழைத்துச் செல்வனவே. ஆனால், அவர்களுக்குக் காட்டப்படும் உருவங்கள் வெவ்வேறு வகையினவாய் அமைந்து விடுகின்றன.

"அவரவர் சமயம் தோறும் தோய்பவன்" புலன் ஐந்துக்கும் சொலப்படான்: அவன் உணர்வின் மூர்த்தி' என்று உணர்ந்தவர்கள் ஞானிகள்.

ஞானி நிலையினை எட்டாதவர்கள், தாம் வணங்கும் இந்த உருவினன் தான் அந்த இறைவன் என்று, அங்கேயே நின்றுவிடுவார்கள்.

அவரவர்த்தம் அறிவுக்கு எட்டிய அளவில், எங்கும் நிறைந்துள்ள பரம்பொருளை, ஓர் தெய்வடிவாகக் கண்டு ஆனந்தம் கொள்கின்றனர்,

''அவரவர் இறையவர் குறைவிலர்; அவரவர் விதிவழி அடைய நின்றனர்'' ஞானப் பெருவள்ளல் நம்மாழ்வார் இறை அனுபவ மொழி இது.

சமயங்கள் பலவற்றுக்கும். பலவிதமான வடிவங்களைத் தாங்கிக் கொண்டு (இதில் தங்கிக் கொண்டு) காட்சியளிப்பவன் ஒருவனே .. அவனே இறைவன்.

## உவமையின் உண்மை :

தோளையும், தாளையும் தடக்கையையும் கண்டு உள்ளத்தைப் பறிகொடுத்து நின்ற மகளிர்கள், எத்தகைய நிலை எய்தினர் என்பதை உவமை வாயிலாக நன்கு உணர முடிகின்றது.

''ஊழ்கொண்ட சமயத்து அன்னான் உருவு கண்டாரை ஒத்தார்''

முறைமையைக் கொண்ட மதங்கள் பலப்பல உள்ளன. அம்மதங்கள் (சமயங்களில்) எல்லாம் தாம் தாம் தனித்தனி ஒவ்வொரு வடிவங்களைத் தெய்வமாகக் கொண்டுள்ளன. அந்த, தெய்வ வடிவங்களில் தங்கியுள்ள அந்த (அன்னான்) இறைவனை, தம் சமயத்துக்குரிய ஒரு வடிவத்தில் மட்டும் காணும் மதவாதிகளைப் போன்றனர் அம்மகளிர்கள்.

''நான் வணங்கும் தெய்வ வடிவமே இறைவன் என்று ஒவ்வொரு சமயத்தினனும் பேசிக் கொள்கின்றான். அதுதான் அவனது நம்பிக்கை.

சமயம் கடந்து சிந்திக்கும் பெருஞானிகளுக்குத்தான், ''எல்லாச் சமயத் தெய்வ வடிவங்களும், இறைவனது அவயவத் தோற்றங்கள்: அவன் அவயவி'' என்ற உண்மை விளங்கும்.

இராமபிரானை, ஒவ்வொரு அவயவத்தில் மட்டும் கண்ட மகளிர்

கள் ஒவ்வொரு தெய்வ வடிவில் மட்டும் இறைவனைக் காணும் மதவாதி களை ஒத்துள்ளார்கள்.

வடிவினை முடியக் கண்ட ஒருவர் யாராவது அக்கூட்டத்துள் இருந்திருப்பின், அவர் சமயம் கடந்த ஞானிக்குச் சமமாகியிருப்பார்.

மாரவேள் ஏவ வந்து எய்திய மகளிர் மூலம் (மன்மதனால் தூண் டப்பட்ட உடல் காதல் பெண்கள்) இவ்வுண்மையைப் புலப்படுத்த எண் ணிய கவிச்சக்ரவர்த்தி. தேரில் உலா வருபவன், 'ஆதிவானவர்பிரான்' என்று ஆரம்பத்திலேயே கோடிட்டுக் காட்டிவிட்டார்.

## 'ஏ'காரம் :

'ஏ' காரம், இக்கவிதைக்கு மேலும் ஏற்றம் கொடுக்கிறது. கற்றார் இதயத்தைக் களிக்கச் செய்கிறது.

'ஏ' ஒரு எழுத்துதான்! ஆனால், அது பிற சொற்களோடு கலக்கும் போது அச்சொற்களை எவ்வெப்பொருளுக்கு உரியனவாக்குகின்றன? இலக்கண உணர்வினர் இதன் இயல்பினை உணர்வர். மற்றையோர் உணரார்.

இறைகலப்பினால், பொருள் மாற்றத்தை உணர்பவர் தத்துவ ஞானிகள்தானே! அதுபோல,

> 'பிரிநிலை, வினா, எண், ஈற்றசை, தேற்றம்,
> இசைநிறை என ஆறு ஏகாரம் மே'

என்பது ஏகாரத்திற்கு இலக்கண நூல் விதித்த விதி.

'ஏ' என்னும் எழுத்து, இடைச் சொல்லாக உருக்காட்டும் போது, ஆறு பொருளைத் தரும்.

**தோளே கண்டார் : தாளே கண்டார் :** என்ற இடங்களில், அது தேற்றப் பொருளைக் கொடுத்தது. தோளை

மட்டுமே, தாளை மட்டுமே கண்டனர் பிறஉறுப்புகளைக் காணவில்லை. கண்டது தோள்தான்; தாள்தான்; தெளிவு பிற அவயவக் காட்சிகளை விலக்கி வைப்பது இந்த 'ஏ' காரம்தான்.

தசரத ராமன் தம் நகரத்து மாப்பிள்ளையாக வருகின்றான், என்று அவன் அவயவ அழகில் ஈடுபட்ட மகளிர்க்கு, 'ஏ' தேற்றப் பொருளோடு நின்று கொண்டுவிட்டது.

தேரூர்ந்து வருபவன் 'ஆதிவானவர் பிரான்' என்ற உணர்வினர்க்கு, 'ஏ' காரம் வினாவாக நின்று, உண்மைப் பொருளை விளக்கு கின்றது.

## வினாப்பொருள்:

தோள் கண்டார் தோளே கண்டார்?

திருத்தோள்களில் நோக்கம் செலுத்தியவர்கள். அதனை முழுமையாகக் கண்டு விட்டார்களா? இல்லை.

அதன் ஆற்றல் எப்படிப்பட்டது?

நூற்றுக்கணக்கான ஆண்டுகளாகத் தவம் செய்த முனிவர்களாலும் செய்ய இயலாத அருங்காரியத்தைச் செய்த ஆற்றலுடையது இத்திருத் தோள்.

முனிவர்கள் எல்லாம் யாரைக் கண்டு அஞ்சிக் கொண்டிருந்தார்களோ. அந்த அரக்கியை-தாடகையை அரைக் கணத்தில் அழித்த ஆற்றலை அடக்கிக்கொண்டுள்ளது இத்திருத்தோள் என்பது யாருக்குத் தெரியும்?

''அலை உருவக்கடல் உருவத்து ஆண்தகை தன் நீண்டு உயர்ந்த நிலை உருவப் **புயவலியை**' நின்று நோக்குவார்தான் உணர முடியும்.

கல்லொக்கும் நெஞ்சினள் தாடகை. அவள்மேல். கரிய செம்மல் விட்ட அம்பு, நெஞ்சைத் துளைத்துக் கொண்டு, அங்கு தங்காது அப்புறம் சென்றது. நல்லவரைக் காக்க, அல்லவரை அழிக்கும் ஆற்றல் தோளில் தங்கியுள்ளது. அது மட்டுமா?

இராமபிரானை, அழைத்து வந்த ஆச்சாரியர் (விசுவாமித்திரர்) ஆணையை நிறைவேற்றும் ஆற்றலும், அடக்கமாகத் திருத்தோள்களில் தங்கியுள்ளது.

இந்த ஆற்றலைக் கண்டவர் அல்லவா தோளைக் கண்டவர் ஆவார்! தோளாற்றலை நேரில் கண்டவர் ஞானமுனியாகிய விசுவா மித்திரர். வேறு யார் கண்டார்?

தோள், கல்லொக்கும் நெஞ்சினளைக் கடிந்தது.

தாள், கல்லையே, காரிகையாக்கியது. இராமபிரான் திருப்பாதம் பட்டதும், கல்லுருவம், அகலிகையாகத் திரும்பியது. அகலிகை அருள் கண்டாள்.

தோளில் ஆற்றல் அடைக்கலமாகியது. தாளில், அருள் அடங்கி விட்டது.

தாள் கண்டார், கல்லையும் (வன்மையையும்) பெண்ணாக்கும்[மென் மையாக்கும்] அருள் நிறைந்திருக்கும் தாளையே கண்டார்? இல்லையே! வெறும் தோற்றத்தை மட்டுமே கண்டனர்.

கல் நெஞ்சினளை அழிக்கும் ஆற்றலும், கல்லுருவினை மெல்லுரு [பெண்] வாக்கும் அருளும் மனிதனிடத்தில் காண இயலுமா? அதனால், இத்தோளும், தாளும், 'ஆதிவானவர்பிரான்' தான் இராமனாக வந்துள் ளான் என்பதைக் கண்டவர்கள்தான் கண்டவர்கள் ஆவார்.

தோளுக்கும் தாளுக்கும் விட்டதா தடக்கை?

தோளும் தாளும் கல்லோடு தொடர்பு கொண்டதென்றால், தடக்கை வில்லோடு தொடர்பு கொண்டது.

தோள் ஆற்றலும், தாள் அருளும் வெளிப்பட, கல்நெஞ்சமும். கல்லும் காரணமாகியது. தடக்கை, அன்பு வெளிவருவதற்கு வில், வந்து முன் நின்றது.

வில்லை ஒத்த புருவத்தினளான சீதா பிராட்டியின் அன்புக்குத் தடையாக இருந்தது ஒரு வில் (சிவதனுசு)

சீதா பிராட்டியின் திருமணம் வில்லில் வளைந்து கிடந்தது. வளைவை நிமிர்த்தினால், பிராட்டியின் நெஞ்சம் நிமிரும்.

சிவதனுசு [வில்] கொண்டு வந்து வைக்கப்பட்டது.

"...அறிவனும், தன்..

புனைந்தசடை முடிதுளக்கிப் பேரேற்றின்
முகம் பார்த்தான்:
வனைந்தனைய திருமேனி வள்ளலும்
அம்மாதவத்தோன்
நினைந்த எலாம் நினைந்து அந்த நெடுஞ்சிலையை
நோக்கினான்.

ஆச்சாரியன் பார்வையிலேயே, தான் செய்ய வேண்டியது என்ன என்பதை உணர்ந்த இராமபிரான், வில்லை நோக்கி நடந்தான், தடக்கை வில்லுக்கு நீண்டது.

எடுத்தது கண்டனர்; இற்றது கேட்டனர். அவ்வளவு விரைவாக, சீதாபிராட்டியின் திருமணத் தடையை விலக்கியது தடக்கை.

பிராட்டியும் பெருமானும் அன்பிற் கலப்பதற்கு உதவியது தடக்கை, இக்கண்கொண்டு கண்டவர்கள் அல்லவா தடக்கை கண்டவர்கள் ஆவார்கள்.

இராமபிரானது, தோளும், தாளும் தடக்கையும், தன்னை மிதிலைக்கு அழைத்து வந்த ஆச்சாரியராகிய விசுவாமித்திரரின் ஆணையை நிறைவேற்றியதால் தான், பெருமை பெற்று விளங்குகின்றன.

பெற்ற பெருமை, அழகு, ஆற்றல், அருள், அன்பு அனைத்தும் கலந்த ஒன்றாகும்.

## சமயம்: (காலம்)

ஊழ்கொண்ட சமயத்து பெருமை நிறைந்த விசுவரூபம் கொண்ட அக்காலத்து, அன்னான்-அந்த எம் பெருமானது முழுவடிவினைக் கண்டவர் யார்? ஒவ்வொரு அவயத்தை மட்டுமே கண்டவர்கள்தானே எல்லோரும்!

இப்படி எல்லாம் ஆழ்ந்த பொருள் வளத்தை அடக்கிக் கொண்டிருப்பது இக்கவிதை. கவிச்சக்ரவர்த்தியின் கவிதையும், காவிய நாயகனாகவே அவதாரம் பெற்று விடுகிறது போலும்!

அவன் வடிவினை முடியக் கண்டவர்களும் இல்லை. அவ்வடிவினைக் காட்டும் கவிதையின் அழகை முழுமையாகச் சுவைத்து விட்டோம் என்று சொல்வாரும் இல்லை.

'ஏ' காரம் தேற்றமாகும் போது, உலகியல் உலவுகிறது.

அது வினாவாக மாறும் போது, ஆன்மீகம் வந்து அணைந்து கொள்கிறது.

உலகியலில் நின்று, ஆன்மீகத்திற்கு வழி காட்டுபவர் கவிச் சக்ரவர்த்தி. இதனை, இக்கவிதையில் கண்டார் கம்பரைக் கண்டார்.

ஸ்ரீ:

# முதல்வனும் புதல்வனும்

காலதேவதை:

கிட்கிந்தை மலையில் முடிசூட்டு விழா.

மலை, இயற்கை வளத்தோடு, செயற்கை நலம் திகழும் மாநகரமாகவும் தோற்றம் அளிக்கிறது. முடிசூட்டு விழாவைக் காணும் பாக்கியம் தனக்குக் கிடைக்கும்' என்று அந்த மாநகர் எண்ணியிருக்கவே முடியாது.

'பழையன கழியும் காலம் எது? புதியன புகுந்து கொள்ளும் காலம் எது?' என்பது யாருக்குத் தெரியும்?

காலம், பழையதை மாற்றத்தான் செய்யும். புதியதைக் கொண்டு வந்து புகுத்தவும் செய்யும். காலத்திற்கு அத்தகையதோர் பேராற்றல் உண்டு.

காலத்தின் பேராற்றலை உணர்ந்தவர்கள், அதனையே, கடவுளாகக் கண்டவர்களும் உண்டு.

மனிதனால் ஆற்ற முடியாததை, எது ஆற்றுகிறதோ, உலகத்திற்கு எது புதுமையைத் தோற்றுவிக்கிறதோ, அதனைக் கண்டு, கடவுளாகக் கொண்டு பயபக்தியுடன் வணங்கி வழிபாடு செய்வது மனிதர் தம் இயல்பு.

'மூலமும் நடுவும் ஈறும் இல்லதோர் மும்மைத்தாய காலம்' மனித இதயத்தில் கடவுளாகவே காட்சி அளிக்கலாம், என்பதைக் கண்டவர் கவிச்சக்ரவர்த்தி கம்பர்.

அக்காலதேவதை, பழையனவற்றைக் கழித்து, புதியனவற்றைப் புகுத்தும் கார்யத்தை, யார் மூலம் நடத்தும் என்பது, ஊன் உடல் தரித்த யாவர்க்கும் புலனாகாத ஒன்று.

காலதேவதை, தன் செயலைச் செம்மையுறச் செய்தற்கு, எந்த இடத்தை தேர்ந்தெடுத்துக் கொள்ளும் என்பதும் யாராலும் உணர்வரிது.

தன் கைக்கு அகப்பட்டவரை, அழிக்குமா? அளிக்குமா? என்ற உண்மையும், முன்கூட்டி யாரும் தெரிந்துகொள்ள இயலாது.

உலக நல் வாழ்விற்காக, சிலரை அழித்து ஒழிப்பதும், சிலரை எதிர்பாராத அளவிற்கு உயர்த்தி வாழ வைப்பதும் கால தேவதையின் கணிப்பாக இருக்கும்.

அளவற்ற அப்பேராற்றல் படைத்த காலதேவதை, கிட்கிந்தை மலை ஏறியது.

அதன் ஏற்றம், யாரை இறக்குகிறது? யாரை உயர்த்துகிறது! என்பதைக் காண நாமும் மலை ஏறுவோம்.

## கிட்கிந்தை:

வானளாவிய மரங்கள். செழித்து வளர்ந்த செடிகள். கொழுத்துப் படர்ந்துள்ள கொடிகள். இவைகளுக்கு வளமூட்டும் நீர் பெருகிய ஆறு.

ஆறாக மண்ணில் அவதாரம் ஆவதற்கு முன், மேலிருந்து கீழ் இறங்கும் அருவி. அத்தனையும் தன்பால் அடங்கப் பெற்றுள்ளது அம்மலை.

வளம் நிறைந்த கிட்கிந்தை மலை, அங்கு வாழும் வானரங்களுக்கு வேண்டிய உணவு வகைகளை, குறைவின்றி நல்கிக் கொண்டு இருந்தது. குறைவற்ற வளம் பெருகிய இடத்தில், நிறைவான நாகரீகம் வளர்தற்குக் காரணமான நகரம் உருவாகும்.

நகரத்தின் நலமும், நாட்டின் வளமும் குறைவற நிறைந்திருந்தாலும், அவைகளின் முழுப் பயன்களும், அங்கு வாழ்வோர்க்குக் கிடைக்க வேண்டுமானால், வல்லமை பெற்ற நல்ரைசு ஒன்று அங்கு அமையவேண்டும்.

ஆட்சி நல்லதாக அமையாது போனால் காயும், கிழங்கும், கனியும் நித்தம் நித்தம் கணக்கின்றித் தரும் நாடாக இருந்தாலும், பட்டினி கிடந்து பரிதவிப்போர் பலராகப் பெருகிவிடுவர்.

கிட்கிந்தையில் அன்றாட வாழ்க்கைக்காக அல்லலுறுவோர் என்று யாரையும் காண முடியாது.

இயற்கை வளமும், செயற்கை நலமும் அங்கு வாழ்நர்க்கு நன்கு பயன்பட்டது. காரணம், அன்றைய அரசு, வல்லரசு; நல்லரசு; நிரம்பினான் ஒருவன் செய்த நிறை அரசு.

ஆட்சி நடத்தியவன், யாரிடத்தும் இல்லாத, எங்கும் காணாத வன்மையைத் தனதாக்கிக் கொண்டவன்.

வல்லமை உடையவன் ஆளும் நாட்டில் வாழுநர்க்குப் பகைவர்களாலும் பயம் இல்லை.

அரசன் வல்லவனாய் இருந்தால் மட்டும் போதாது: நல்லவனாகவும் இருக்கவேண்டும்.

வல்லவனாகவும் நல்லவனாகவும் இருந்து கிட்கிந்தையை ஆண்டவன் யார்? அந்த விபரத்தை நல்லவன் ஒருவன் சொல்லக்கேட்போம். சொல்ல வேண்டியதை இடம் அறிந்து, காலம் அறிந்து, சுருக்கமாகவும் தெளிவாகவும் சொல்பவன்தான் சொல்லின் செல்வனாக முடியும். சொல்லின் செல்வனே சொல்கின்றான்.

"நாலு வேதமாம் நவையில் சாலியின்
வேலி அன்னவன், மாலையின் மேல்உளான்:
சூலி தன்அருள் துறையின் முற்றினான்;
'வாலி' என்று உளான் வரம்பில் ஆற்றலான்"

வாலி:

வாலியின் ஆற்றல் வரம்பற்றது: (வரம்பு அற்றது) வரம் பெற்றது: உரம் உற்றது. உள்ளம் சிவபக்தியில் ஊறியது.

உடல் வளத்தாலும், உள்ளம் பக்தி நலத்தாலும் மேன்மையுற்றிருந்ததால், வாலியின் ஆட்சியில், நாலு வேதங்களும் நன்றாகப் பரவியிருந்தன. மலை வளத்தால் பயிர்கள் செழித்து வளர்வது போன்று, ஆட்சி வளத்தால், வாழ்நர்க்கு அறவழி காட்டும் வேதங்களும் குறைவின்றி வளர்ந்தன. வாலியின் நல்லாட்சி, வேதப்பயிர்களுக்கு வேலியாக அமைந்திருந்தது.

'குடிதழீஇக் கோலோச்சும்' செங்கோலனாகத்தான், கிட்கிந்தை நகரைத் தலைமையாகக் கொண்டு, நாட்டை ஆண்டு வந்தான் வாலி.

அவனுடைய நாட்டு வாழ்க்கையும் (புற வாழ்வு) வீட்டு வாழ்க்கையும் (அக வாழ்வு) சிறப்பாகத்தான் அமைந்திருந்தன.

இல்லறத்தை நல்லறமாக நடத்த, அவனுக்கு மங்கல மனைவியாக

வாய்த்தவள், அமிழ்தின் தோன்றிய வேயிடைத் தோளினாள்; தாரை என்ற பெயரினள்.

வீட்டிலும், பண்புக்கோர் கொள்கலமான இல்லத்தரசி. நாட்டிலும் ஒழுக்க சீலர்கள். அதனால் இவனுக்கு, உள்ளும் பகையில்லை, வெளியும் பகையில்லை.

ஏன்? கூற்றும் இவன் பெயர் சொல்லக் கூசும்.

இத்தகைய வன்மையும் நன்மையும் கலந்த வாலி கால தேவதையின் கைக்குரியவனான்.

காலதேவதையின் கையில் அகப்பட்ட வாலி ஆக்கப்பட வேண்டியவனா? போக்கப்பட வேண்டியவனா?

ஆக்குதலும் நீக்குதலும் காலத்தின் கையில்உள்ளது.

எங்கு அளவு கடந்த வன்மை பெருகிக் கொண்டு வருகிறதோ, அதற்குப் பின்னாலேயே, அதனை தொடர்ந்து அழிவும் நகர்ந்துநகர்ந்து வந்து கொண்டே இருக்கும்.

பெருகிய வல்லமை, தன்னைத் தொடர்ந்து வந்த அழிவை, மனிதனுக்குக் காட்டாது மறைக்கும் திரையாகிவிடுகிறது.

திரைக்குப் பின்னால், மறைந்திருந்த, தன் அழிவை, வாலியும் திரும்பிப் பார்க்கவில்லை.

உலக நல்வாழ்விற்காக, இத்தகைய நன்மையும் வன்மையும் நிரம்பப் பெற்ற வாலியை, உலகை விட்டு நீக்கித்தான் ஆக வேண்டும் என்று கால தேவதை முடிவு செய்து விட்டது.

இந்த நற்காரியம் செய்வதற்கு யாருக்கு வாய்ப்பளிப்பது? கொடுத்த வாய்ப்பை, எத்தகைய அவச்சொல் வந்தாலும், அதனைப் பொருட்

படுத்தாது, பயன்படுத்திக் கொள்ளக்கூடிய ஒரு மா மனிதனைத் தேடிக் கொண்டிருந்தது கால தேவதை.

## இராமபிரான் :

தனது தேவியைத் தேடிக் கொண்டிருந்த ஒருவனையே, காலதே வதையும், தன் காரியத்தை நிறைவேற்றுவதற்குரியவனாகத் தேடிக் கண்டுபிடித்துக் கொண்டு விட்டது.

"அறம் தலைநிறுத்தவும், மறத்தை (பாவத்தை) ஒறுக்கவும், தக் கோர் இடர் துடைக்கவும் வந்தவன் இவன்தான்; இவனிடம் ஒப்படைக் கப்படும் காரியம். எத்தகைய தடை வந்தாலும், நிறைவேற்றப்படும்! என்பதை, காலதேவதை நன்கு உணர்ந்து கொண்டு விட்டது.

'இராமாவதார நிறைவேற்றத்திற்கு, வாலி இதுவரை மண்ணுல கில் வாழ்ந்தது போதும்: இனி மரணத்தைத் தழுவ வேண்டியவனே' என்பதை நன்கு உணர்ந்து தெளிவு பெற்ற காலக்கடவுள், அப்பொறுப் பினை இராமனிடம் ஒப்படைத்து விட்டது.

இராமன் காப்பியத் தலைவன். தலைவனிடம் ஒப்படைக்கப்பட்ட பொறுப்பு மிகப் பெரியது. எவ்வளவு பெரியது?

காலம் என்ற ஒன்று இருக்கும் வரை இப்பொறுப்புக்குரியவன் செய்த செயலை ஆய்வு செய்து கொண்டே இருக்கும். அச்செயலால், செய்தவனைப் போற்றவும் செய்யும்: தூற்றவும் செய்யும் உலகம்.

இராமன், தன் தந்தையிட்ட ஆணையை ஏற்று, சிற்றன்னை சொன்ன வார்த்தையைத் தலைமேல் தாங்கி, கானகம் வந்ததில், அவ னுக்குத் துன்பம் இல்லை. ஆணையைக் கடவாமல், இருப்பதற்கு, கான கம் கடந்தான்! கடல் கடந்தான்! என்ற புகழே உண்டு.

கம்பன் அறநிலை
KAMBAN TRUST
KARAIKUDI- S. RY

ஆனால், 'காலக்கடவுள் இட்ட இந்த ஆணையை - பொறுப்பை நிறைவேற்றினால், எத்தகைய பழிப்புக்கும் இழிப்புக்கும் ஆளாவோம்' என்பது காவிய நாயகனுக்குத் தெரியும்.

'சொல்லறம் துறந்திலாத தூயவன் மரபிலே தோன்றிய நான், இல்லறந் துறந்ததோடு, கால தேவதையின் ஆணைக்காக, வில்லறத்தையும் துறக்க வேண்டியிருக்கிறதே' என்று காப்பியத் தலைவன் நினைத்துப் பார்த்திருப்பான்,

'ஆனாலும், வாலிக்கு, மரணப்படுக்கையை விரித்து வைக்கும் செயலைச் செய்தேதான் ஆக வேண்டும்' என்பதை ஐயம் இன்றித் தெளிந்துகொண்டான் இராமன்.

'செய்தக்க செய்யாமையாலும் கெடும்' ஆதலால், இது செய்ய வேண்டிய செயலே. உணர்வார் உணரட்டும். உணரார் உளறட்டும், இது முடிவு.

### காரணம்:

செய்யும் செயலுக்குக் காரணம் வேண்டும். காரணம் இன்றி, காரியம் இல்லை.

காரியம் உருப்பெறுதற்கு, காரணம் முதலாகவும் நிற்கும், நிமித்தமாகவும் நிற்கும், துணையாகவும் நிற்கும்.

பொன் ஆபரணம் ஒன்று உருவாகுவதற்கு, பொன் முதற் காரணம்: பொற்கொல்லன் நிமித்த காரணம்: ஆபரணம் செய்தற்குரிய உரைகல் முதலிய கருவிகள் துணைக்காரணமாகும்.

வாலியின் மறைவிற்கு, முதல் காரணம் எது? துணைக்காரணம் எது? நிமித்த காரணம் எது?

சொல்லப்படுகின்ற காரணங்கள், அனைவராலும் ஏற்கப்படுதற் குரியதாக அமையுமா?

வாலியை வானுலகிற்கு அனுப்பி வைத்து, அவன் தம்பி சுக்கிரீ வனுக்கு, பொன்மகுடம் சூட்டுவித்த, காவியத் தலைவன், பழையன கழித்ததற்கும், புதிய புகுத்தியதற்கும், காட்டும், காரணங்கள் யாவை?

அக்காரணங்கள் எல்லாக் காலத்தினராலும் ஏற்கப்படுதற்குரியதா?

பழையதன் மாற்றமும் புதியதன் தோற்றமும் தேவைதானா? தேவை தேடப்பட்டதா? தானே வந்ததா?

இவ்வினாக்கள் எல்லாம் ஒன்றன் பின் ஒன்றாகத் தொடர்ந்து வந்துகொண்டே இருக்கும். இந்நிகழ்ச்சிச் செய்தியை ஊன்றிக் கவனித் துக் கற்பார் உள்ளத்தில்.

நிரம்பினான் (வாலி) ஒருவன் செய்த நிறை அரசை நிர்மூலமாக்கி புறம்போய ஒருவனை (சுக்ரீவன்) புதிய மன்னனாய்ப் புகுத்துதற்கு, எத் தன்னை காரணங்களைக் காட்டினாலும், கற்றவர் உள்ளத்தில், அவைகள் எளிதில் புகாது

வாலியின் சிவபக்தி தோய்ந்த தூய அக வாழ்வையும், பதவி பெற்ற பிறகு, சுக்ரீவன் நடத்திய காதல் களியாட்ட இன்ப வாழ்வையும் ஊன்றி கவனித்தவர்கள், அண்ணனின் செலவிற்கும், தம்பியின் வரவிற் கும், எத்தனைக் காரணங்கள் வந்தாலும், அவைகளைக் கவனியார்கள்.

சரணம் அடைந்த தம்பியையும் (சுக்ரீவன்) மரணம் அடையப் போகும் அண்ணனையும் (வாலி) காப்பியக் களத்தில் நிறுத்தி, கவிச் சக்ரவர்த்தி ஓர் அற்புதமான வாதத்தை வளர வைத்துவிட்டார்.

கவிக்குலக்கோனும் (வாலி) காப்பியத் தலைவனும், கால தேவ தையும் கலந்து நடத்தும் இந்நிகழ்ச்சியை, எல்லாக் காலத்துச் சிந்தனை யாளர்களுக்கும். ஓர் சிந்தனை விருந்தாய்ப் படைத்துக் காட்டுதலாலே யே கம்பர், கவிஞர் உலகில் தலைமை வகிக்கிறார் என்று சொல்லலாம்.

கவிஞர், தம் பாத்திரப் படைப்புக்களில், ஒன்றைப் போக்கு வதற்கும், ஒன்றை ஆக்குவதற்கும், அவரே காரணம் கூறி ஆக வேண்டும்.

கதையில் சிக்கலைப் போடுவதும் அதனை அவிழ்ப்பதும் காப் பியக் [கவிஞர்] கலைஞர் வேலைதான்!

கால தேவதையின் கையில் சிக்க வைத்த, காவிய நாயகனை, நயமாக, நலமுடன் விடுவிக்க, கம்பர் கையாண்ட முறை, கற்பார் உள் ளத்தை நிறைவு செய்கிறதா?

காண்போம்.

பழைய கழிவும், புதிய புகுவும்தான் நடந்த காரியம்; இக்காரியத் திற்கு அடிப்படையாகக் காட்டப்படும் காரணங்கள் மூன்று.

## முதற் காரணம் :

மண்ணாலான குடம். பொன்னாலான ஆபரணம். குடம் ஆவ தற்கு மண் முதற்காரணம். ஆபரணத்திற்கு முதற்காரணம் பொன். மண்ணே குடம் ஆயிற்று. பொன்னே ஆபரணமாயிற்று. மண்ணையும் குடத்தையும் பிரிக்க இயலாது. பொன்னையும் ஆபரணத்தையும் பிரிக்க முடியாது.

எது ஒன்று. அதுவாகவே உருவாகிறதோ, அப்பொருள்தான் மூலம்; முதல். மூலமே முதல் பொருள்.

பொருளைத்தான் மனிதன் காண்கின்றானே அன்றி 'அதனுடைய மூலம் எது?' என்பதைக் காண முற்படுவதில்லை.

பிரபஞ்சம்-உலம் காணப்படுகிறது. இதற்கு மூலம் எது? எது பிரபஞ்சமாகத் தோற்றம் அளிக்கிறது? என்ற ஆய்வில் ஈடுபட்ட ஞானி களுக்கு ஓரளவு உண்மை தோன்றும்.

குடத்திற்கு மூலம் (முதல்) மண்: ஆபரணத்திற்கு மூலம் பொன். இது தெரிகிறது.

இதுபோன்றதுதான் பிரபஞ்சத்திற்கு மூலம் (முதல்) ஓர் அநாதியான அகண்ட சக்தி. பிரபஞ்சத்தையும் அதற்கு மூல (முதல்) காரணமாக சக்தியையும் பிரித்துக் காண இயலாது. மண்ணையும், குடத்தையும் பிரிக்க முடியாததைப் போல; பொன்னையும் ஆபரணத்தையும் பிரிக்க இயலாததைப் போல;

காரியம் தோற்றுகிறது: காரணம் தோற்றுவதில்லை.

சுக்ரீவன் சரணம்; வாலியின் மரணம். சரணமும், மரணமும் நமக்குத் தெரிகிறது. ஆட்சி மாற்றமும். காணப்படுகிறது. இது கிட்கிந்தையில் நிகழ்ந்த காரியம். இந்த காரியத்திற்கு முதற்காரணம் எது? அதனைக் காண முற்படுவோர், மதிநுட்பம் நூலோருடைய நுண்மாண் நுழை புலத்தினராய் மட்டும் இருந்தால் போதாது; கதையின் முன் பின் நிகழ்ச்சிகளிலும் கண்ணோட்டம் செலுத்தியவராதல் வேண்டும்.

மேலும், 'இராமவதார நோக்கம் என்ன? காப்பியத் தலைவனின் குறிக்கோள் யாது? அக்குறிக்கோள் நிறைவேற்றத்திற்குத் துணையாவர் யாவர்? அதற்குத் தடையாக, செயல்படுவார் யார்?' என்ற வினாக்களையும் முன்னிறுத்திக் கொண்டு காரணம் காண முற்பட வேண்டும்.

**வள்ளுவம் :**

> "தேரான் தெளிவும், தெளிந்தான்கண் ஐயுறவும்
> தீரா இடும்பை தரும்."

நாட்டை ஆளும் மன்னனுக்கு வள்ளுவர் தரும் அறவுரை இது: மன்னனுக்குரித்தான அறிவுரையும் இதுதான்.

மீள இயலாத துன்பத்தில் மன்னனை ஆழ்த்துவது, அவனிடமே அடங்கிக் கிடக்கும் இயல்புதான்.

நாட்டு நலத்தையே நாடி நிற்கும் மன்னன், தன் துணைக்கு, அவ் வப்போது; பொறுப்பை ஒப்படைப்பதற்கு உரியவனாக ஒருவனைத் தேர்ந்தெடுத்துக் கொள்ள வேண்டும்.

பதவிக்கு ஆளைத் தேர்ந்தெடுக்கும் போது, மன்னன் எப்படி நடந்து கொள்ள வேண்டும் என்று, மன்னனை எச்சரிக்கிறது, வள்ளுவம்

இரண்டு வகையில் மன்னனுக்கு அழிவு வரலாம். பொறுப்பு ஏற்க வேண்டிய ஒருவனை, நன்கு ஆ ரா ய் ந் து பார்க்காமல் தெளிந்து கொண்டால், அவனாலேயே மன்னனுக்கு அழிவு வரும்.

மற்றொன்று :

ஆராய்ந்து தெளிந்து, பொறுப்பு ஒப்படைக்கப் பட்ட ஒருவன் மேல் மன்னன் சந்தேகம் கொண்டாலும், அம்மன்னனுக்கு மீளாத் துன் பம் நெருங்கி விடும்.

இந்த வள்ளுவத்தை அடிப்படையாக்கிக் கொண்டு வாலியிடம் வருவோம்.

## ஐயம் :

வாலியின் உள்ளத்தில் ஐயம் புகுந்தது. யாருடைய உள்ளத்தை ஐயம் (சந்தேகம்) ஆட்கொள்கின்றதோ, அவரை சிந்தித்து, உண்மை காண விடுவதில்லை.

ஐயத்தின் ஆளுகைக்கு உட்பட்ட உள்ளம் ஒரு முடிவுக்கு வரக் கூடும். அம்முடிவு, அவருடைய ஆக்கத்திற்கு வழி காட்டுவதாக அமைவ தில்லை. அழிவுப் பாதைக்குத்தான் அம்முடிவு அழைத்துசெல்லும்.

ஐயம், தான் நுழைந்த உள்ளத்தை நன்கு கலக்கி வைத்து, தன் வசப்படுத்திக் கொள்வதால், சென்றவிடத்தால், செலவிடாது, நன்றின் பால் உய்க்கும் அறிவு, அங்கு பக்கத்தில் நெருங்கவும் முடிவதில்லை.

அறிவு, தன் முழு ஆற்றலோடு, உள்ளத்தை நெருங்கி, ஐயப் பேயிடம் அகப்பட்டுத் தவித்துக் கொண்டிருந்த அதனை விடுவித்துவிட் டால், மனிதன் அழிவினின்றும் தப்பித்துக் கொள்வான்.

எவ்வளவு, நுண்ணிய நூல் பல கற்றிருந்தாலும், அந்நூலறிவு, ஐயத்திடம் தோற்றுப் போகின்றதே அன்றி, வெற்றியைக் காண முடிவ தில்லை.

இதுதான், வரலாறு புகட்டும் பாடம். கவிஞர்கள், தாம் படைத்த காப்பிய மாந்தர்கள் மூலமாக, அறிவுக்கும், ஐயத்திற்கும் நடக்கும் போராட்டத்தில், பின்னதே, முன்னதை முழுமையாக வென்றுவிடுகிறது என்பதை, மக்கள் நன்கு உணரும் வண்ணம் எடுத்துக் காட்டுகின்றார்.

எடுத்துக் காட்டுவதெல்லாம் எதற்கு?

மக்கள், ஐயத்திற்கு ஆட்படாமல், ஐயத்தின் நீங்கித் தெளிந்து நல்வாழ்வு வாழவேண்டும் என்பதற்குத்தான்.

சால்புடைக் கவிஞர்கள் கொடுக்கும் எச்சரிக்கைக்குச் செவி கொடுத்தால், ஆபத்தினின்றும் தப்பித்துக் கொள்ளலாம்.

வாலியைப் போன்றே, ஐயப்பேயிடம் அகப்பட்டுக் கொண்டு, உண்மை புரியாது தவித்த ஒருவன், 'செய்தக்க அல்ல செய்து' 'கெட்டுப் போனான்.

வாலியின் ஐயம், புறவாழ்வின் மூலம், உள்ளே புகுந்து, அவனது, நாட்டு வாழ்க்கையின் அழிவுக்கு அடிகோலி, வீட்டு வாழ்க்கையின் தூய்மையையும் அசுத்தப்படுத்தியது.

## ஒத்தெல்லா :

அவனைப் போன்றே பேராற்றல் படைத்த மாபெரும் வீரன். ஐயப்பேய் இவனை அழிப்பதற்கு, இவனுடைய அகவாழ்வை [வீட்டு வாழ்க்கை] நுழை வாயிலாகக் கொண்டது.

வீட்டினுள் கம்பீரமாக நுழைந்தது ஐயப்பேய். இதனை நன்கு வளர்ப்பதற்கு ஒரு கைக்குட்டை துணையாக வந்து சேர்ந்தது. தன் காரியத்தை வீரன் மூலமாக மிக வெற்றிகரமாக முடித்துவிட்டது.

வீரனின் வீட்டு வாழ்க்கையை முழுமையாக முடித்துத் தீர்த்து விட்டது. நாட்டு வாழ்க்கையைப் பெருங்களங்கப்படுத்தி விட்டது.

வீரனே அழியும் போது ஏற்படும் துன்பத்தை விட, வீரனது அன்புக்குப் பாத்திரமான, அவன் காதலி, எமலோகத்தை எட்டிக் கொண்டிருக்கும் போதுதான், துன்பம் தீராத்தன்மையதாகி எல்லை மீறிவிடுகிறது.

அதுவும், அவனது ஆராக் காதலுக்குரிய அந்த வீரனுடைய கைகளையே, கூற்றுவன் [உடலையும் உயிரையும் கூறுபடுத்துபவன்] வேலையைச் செய்ய வைத்து விட்டதென்றால், இந்த ஐயப்பேயின் கொடுமையை என்னென்று உரைப்பது?

அந்த வீரன் யார்! ஐயத்துக்குட்பட்டு அவன் செய்த, செய்து கொண்ட கொடுஞ்செயல் யாது? இதனை எல்லாம் எடுத்துக் காட்டி மக்களை எச்சரிக்கும் கவிஞர், யார்?

நீக்ரோ இனத்தைச் சேர்ந்தவன் ஒத்தெல்லோ. வெனிஸ் தேசத்துப் படைத் தளபதியாக அமர்த்தப்பட்டவன். அவன் போர்க்களத்தில் காட்டிய வீரச் செயலில் தன்னை இழந்தாள் அழகுக்கோர் உருவமாய் விளங்கிய டெஸ்டிமோனா. தன் தகப்பன் விருப்பத்தையும் தட்டி எறிந்துவிட்டு, அழகுத் திலகம் அவனைக் காதலித்து அவனோடு ஒன்றானாள்.

நாட்டுப் போர்க்களத்தில் தளபதியாக இருப்பவன், வீட்டையும் போர்க்களமாக்குவான் என்று அவள் எண்ணி இருக்கவே முடியாது.

எந்தப் படுக்கை அறை, அவளது வெண்மைத் திருமேனியையும், அவனது கருமை உடலையும் கலக்க வைத்து, இன்பத்தின் எல்லைக்கு அழைத்துச் சென்றதோ, அதே அறை, அவளை தீராத் துயரத்தின் முடிவிற்கே துரத்திவிடும் என்பதைக் கனவிலும் நினைத்திருக்க முடியாது.

இவ்வளவு தூய்மைக் காதலியான, தன் அருமை மனைவி, ஒத்தெல்லோவின் சந்தேகத்துக்குரியவளானாள். அவன் மனச் சிறையில் புகுந்த ஐயம் வெளியேறவே இல்லை.

வெளியேறியது எப்போது?

அவள் கழுத்தை, தன் கையினாலேயே நெறித்துக் கொன்று தீர்த்த பிறகுதான்.

அந்த ஐயப்பேய், போகிற போக்கில். அவனையும் தீர்த்து முடித்து விட்டது.

சந்தேகம், எவ்வளவு பெரிய கொடுஞ்செயலாகிய காரியம் உருவாகுவதற்குக் காரணமாக முன் நிற்கிறது!

இதைத் தெளிவாக உலக மக்கட்கு உணர்த்துபவர் மாபெரும் கவிஞராகிய செகப்பிரியர் (ஷேக்ஸ்பியர்)

## வாலியின் ஐயம் யாது?

தன் அருமைத் தம்பி சுக்கிரீவனுக்கு இளவரசுப் பட்டம் நல்கி, இன்பமே நிறைந்த தூயதோர் வாழ்க்கையினன் வாலி.

தன், அன்பின் அரவணைப்பிற்குரிய மைந்தன் அங்கதனையும்

அகல வைத்து விட்டு, தம்பியே அப்பொறுப்பிற்குத் தகுதியுடையவன் எனத் தேர்ந்து தெளிந்து கொண்டவன் வாலி.

நாட்டின் ஆட்சிப் பொறுப்பிற்குரிய தகுதி, மிகுதியும் உடையவன் இவன்தான் என்று நன்கு தேர்ந்து, உணர்ந்து, தெளிந்து எடுத்துக் கொள்ளப்பட்ட தம்பி சுக்கிரீவன், அண்ணன் வாலியின் ஐயத்திற்குரிய வனாயினான்.

வாலியை வதைக்கப் போகும் ஐயப்பேய், வெளியிலிருந்து வர வில்லை. அவன் மனத்தையே பிறப்பிடமாக்கிக் கொண்டுவிட்டது.

நாலு வேதமாம் நவைஇல்சாலி (பயிர்) யை, எவையும் அழிக்க முடியாதபடி வேலியாக நின்று, அந்நற்பயிரைக் காத்தவன், தன் அழிவுக்குத் தோன்றிய ஐயத்தை அகற்றி, தன்னை, அழிவினின்றும் காத்துக் கொள்ள இயலாதவனாயினான் வாலி.

**'மேலை நாள் உயிரொடும் பிறந்து, தான் விளை**
**காலம் ஓர்ந்து, உடன் உறையும் நோய்'**
**போன்றதுதான் ஐயமும்.**

நோயும் வெளியிலிருந்து வருவதில்லை. உயிரோடு ஒட்டிக்கொண்டே பிறக்கிறது. காலத்தை எதிர்பார்த்துக் கொண்டே இருக்கிறது. தான் வேலை செய்தற்குரிய வாய்ப்பினை, காலதேவதை நல்கியதும், ஒழுங்காகத் தன் கடமையைச் செய்து முடித்து விடுகிறது. தான், இது வரை உறைந்து வந்த இடத்தை மண்ணோடு மறைத்து விடுகிறது அந்நோய்.

அப்படிப்பட்டதுதான் ஐய உணர்வும்.

**சூழ்நிலை :**

மாயாவி அசுரனுக்கும், வாலிக்கும் நேரடியாகப் பெரும்போர்.

இருவரும் வல்லமை மிக்கவர்கள். ஒருவரை ஒருவர் அடித்துக் கொண்டும், அழித்துக் கொண்டும் ஒரு மலைக் குகையினுள் நுழைந்தனர்.

வாலி, மாயாவியைக் கொல்ல மலைக் குகைக்குள் செல்லும் போது, அதுவரை இளவரசனாக இருந்த, தம்பி சுக்கிரீவனிடம், அரசின் முழுப்பொறுப்பையும் ஒப்படைத்துச் சென்றான்.

'அன்னவன் (வாலி) எமக்கு அரசு ஆகவே
இன்னவன் இளம்பதம் இயற்றும் நாள்,
முன்னவன் குலப்பகைஞன் - முட்டினான்
மின் எயிற்று வாள் அவுணன் வெம்மையான்'

என்பது அனுமன் கூற்று.

எய்துகாலை, அப்பிலனுள் எய்தி, யான்
நொய்தின் அங்கு அவற் கொணர்வென்:
நோன்மையாய் :
செய்தி, காவல், நீ சிறிது போழ்து''

என்பது, குகைக்குள் நுழையும் போது வாலி, சுக்கிரீவனிடம் சொன்ன உறுதிமொழிச் சொல்.

அண்ணன் ஆணையை அப்படியே சிரமேற்கொண்டு கிட்கிந்தை ஆட்சியை ஏற்று, நாட்டைக் காவல் செய்து வந்தான் தம்பி.

ஆட்சியின் மேல் சிறிதும் பற்றற்றவனாய், அண்ணன் இட்ட கட்டளையை நிறைவேற்றுவதே தம்பியின் கடமை, என்ற உணர்வுதான் இருந்தது சுக்கிரீவனிடம்.

கட்டியங்காரனைப் போன்றவன் அல்லன் சுக்கிரீவன்.

ஆனால், பாவம், வாலியினால், (கட்டியங்காரனைப் போன்று) கிடைத்த பதவியைத் தனக்கே உரித்தாக்கிக் கொண்டு, பதவி கொடுத்த, தன்னை ஒழித்து விடும் சூழ்ச்சிக்காரன் இவன்' என்று தப்புக் கணக்குப் போடப்படும் நிலைக்குத் தள்ளப்பட்டு விட்டான் சுக்கிரீவன்.

## கட்டியங்காரன் :

எமாங்கத நாட்டு மன்னன் சச்சந்தன். நாட்டிற்கேற்ற காவல் மன்னன். அதே சமயத்தில் வீட்டிற்கேற்ற காதல் கணவனாகவும் ஆனான். தன், காதல் மனைவி, வசையிலாள் - வரத்தின் வந்தாள் - வான்சுவை அமிர்தம் அன்னாளாகிய விசையைப் பிரிய இயலாதவனாயி னான் சச்சந்தன்.

'தன் வீட்டுக் காதல் வாழ்க்கைக்கு, நாட்டுக் காவல் - அரச வாழ்க்கை தடையாக நிற்கிறதே' என உணர்ந்தான் அந்த மன்னன்.

ஆகவே, தன் நம்பிக்கைக்குப் பாத்திரமாகக் கருதப்பட்ட (தேராது தெளிந்த) அமைச்சன் கட்டியங்காரனிடம் 'வேந்தன் நீ ஆகி, இசைபடக் காத்தல் வேண்டும்' என்று நாட்டுப் பொறுப்பை ஒப்படைத்தான் சச்சந்தன்.

அரச பதவி பெற்ற கட்டியங்காரன், 'கோது செய்குணக் கோதி னும் கோதனன்' ஆனான். [கோது குற்றம்] குற்றங்களுள் எல்லாம் மிகப் பெரிய குற்றம் செய்ந்நன்றி மறத்தல் என்பது.

'எந்நன்றி கொன்றார்க்கும் உய்வு உண்டு:

ஆனால்,

செய்ந்நன்றி கொன்ற ஒருவனுக்கு என்றும் உய்வு இல்லை. என்னும் உண்மையை, 'வினைவகையால் வேறுபட்ட' அவனது உள்ளம் ஏற்றுக் கொள்ளவில்லை.

பெற்ற பதவி, பண்பைப் பெறாத வண்ணம் தடுத்து விட்டது. பதவி கொடுத்தவனையே அழிக்கும் அளவிற்கு, அவனைக் கெடுத்து விட்டது.

'நன்றி மறப்பது நன்று அன்று' என்ற வாழ்க்கைப் பேருண்மையை எல்லாம், பதவியில் மூழ்கிக் களிக்கும் கட்டியங்காரன் பறக்கடித்து விட்டான்.

அரச உடைமைகளை எல்லாம் ஒருங்கே பெற்ற கட்டியங்காரன், தன்னை வாழ வைத்த தெய்வத்தை-சச்சந்தனை தனித்து நின்ற மன்னனை விண்ணுலகுக்கு அனுப்ப எண்ணினான். எண்ணிய வண்ணமே செய்து முடித்தும் விட்டான்.

திருத்தக்க தேவர், தம் சிந்தாமணிப் பெருங்காப்பியத்தில் படைத்துக் காட்டப்பட்டவன் கட்டியங்காரன்.

'எதிர்பாராத ஒரு பெரும் பதவி கிடைத்தால், அதனைத் தனக்கே நிலைக்க வைத்துக்கொள்ள வேண்டும்' என்ற கீழ்மை எண்ணமே, மனித உள்ளத்தில் மேலோங்கி நிற்கும் போலும்!

கீழ்மை மேலோங்கும் போது, பதவியில் மேலே இருப்பவன், பண்பில் கீழோனாகிவிடுகின்றான்.

அத்தகைய, நன்றி மறந்த கீழோனாக, சுக்கிரீவன் கருதப்பட்டான், பதவி கொடுத்த வாலியினால்.

**காரணம்:**

பதவி கிடைத்த பிறகு, இன்பக் களியாட்டில், நன்றி மறக்கும் நிலைக்கு சுக்கிரீவன் தள்ளப்பட்டதும் உண்டு. ஆனால், இது இங்கு இல்லை.

வாலியிடம், அவன், அப்பாவத்திற்குள்ளாகவில்லை [நன்றி மறக்கும்] என்பது, கிட்கிந்தையில் உள்ள பெரியோர்கள் அனைவர்க்கும் தெரியும்.

ஆனால் வாலிக்கு மட்டும் தெரியாது.

தெரியாமல் போகக் காரணம்.

மலைக்குகைக்குள், மாயாவியோடு போர் செய்து கொண்டே புகுந்த வாலி வெளிவரவில்லை.

நாட்கள் கடந்தன. வாரங்கள் தாண்டின; மாதங்களும் ஒன்றை ஒன்று தொடர்ந்து கழிந்தன; ஆண்டும் ஒன்று கழிந்து மற்றொன்று முடியும் நிலைக்குக் காலம் வந்தது.

உள்ளிருந்து இரத்த ஆறு பெருக்கெடுத்து ஓடி வந்தது.

இரத்தப் பெருக்கைக் கண்டு அஞ்சிய வானர வீரர்கள் உள்ளத்தில், ஓர் ஐயம் தோன்றியது.

தோன்றிய ஐயம், சுக்கிரீவனை, தற்காலிகப் பதவியினின்றும் நிரந்தரப் பதவிக்கு ஏற்றியது.

வெளியில் ஓடி வந்த இரத்த வெள்ளம், மாயாவி. வாலியைக் கொன்றதனால் ஏற்பட்டதுதான், என்ற தவறான எண்ணத்தை வானர வீரர்களது உள்ளத்தில் ஓட வைத்து விட்டது.

வந்த இரத்தப் பெருக்கிற்குரியவன் மாயாவியா? வாலியா? பெருக்கியவன் அசுர வீரனா? அல்லது வானர வீரனா?

அழிந்தவன் ஒழிந்தான் : அழித்தவன் வருவான்.

வாலி அழிந்தவனாகி, மாயாவி அழித்தவனாகி வெளி வந்தால்,

வெளியில் உள்ள அனைவரையும் அழித்து ஒழித்து விடுவானே என்று வானர வீரர்கள் அஞ்சினார்கள்.

'குகையினின்றும் வெற்றி வீரனாய் வெளியேறுபவன் இவனா அவனா? என்ற ஐயம், இவர்களை ஒரு தவறான முடிவுக்குத் தள்ளிக் கொண்டு போய் விட்டது.

உண்மைக்குப் புறம்பான முடிவுக்கு, வானர வீரர்கள் தள்ளப் பட்டது போன்றுதான், வெற்றிக் களிப்போடு வெளியேறிய வாலியும், நடவாத ஒன்றை நடந்ததாகக் கருதும் பொய்ம்மை எண்ணத்திற்கு உள்ளானான்.

இறந்தது வாலிதான்; இருப்பது மாயாவிதான்; வெளியில் வந்தால் நம்மை இருக்க ஒட்டான்; என்ற அச்சத்தால், மலைக்குகையினைப் பெரிய பெரிய பாறாங்கற்களைக் கொண்டு அடைத்தனர் வானர வீரர்கள்.

இருப்பினும், சுக்கிரீவன், இரத்த பாசத்தால் பிணிக்கப்பட்டவனாய்,

'நானும், உள்ளே சென்று என் முன்னவனைத் தேடுவேன்: அவனைக் கொன்றுளான்தனைக் கொல்லுவேன்: கொல்ல ஒண்ணாது எனின், அங்கேயே பொன்றுவேன் (இறப்பேன்)'. என்று குகைக்குள் செல்லத் துணிந்தான்.

இவன் துணிவைக் கண்ட வானர வல்லவர்கள், நல்லவர்கள் எல்லாம், அவனைத் தடுத்து நிறுத்தி, அன்போடு,

> 'தொழுது இரந்து, "நின் தொழில் இது: ஆதலால்,
> எழுது வென்றியாய்! அரசு செய்க!

என்று வேண்டிக் கொண்டார்கள்.

அவர்களது வேண்டுகோளுக்கு சுக்கிரீவன் அளித்த பதில், ‘பழுது இது’ என்பது.

‘அண்ணனது இருப்பு மண்ணுலகமா! விண்ணுலகமா! என்று உறுதியாகத் தெரிந்து கொள்ளும் முன்பே, அரச பதவியை, ஏற்றுக் கொள்ளுதல், குற்றம் உடையதே ஆகும் (பழுது இது)’ என்று சுக்கிரீவன் புகன்ற மொழி, அவனது பண்பாட்டைத் தெளிவாகக் காட்டும்.

## சூழ்நிலை :

இத்தகைய உயர்ந்த பண்பினனாய தம்பி, அண்ணனது பகைமைக்கு உள்ளாக்கப்பட்டு விட்டானே! இந்தச் சூழ்நிலையை என்ன என்று வியப்பது.

‘வெளியயேறுவது மாயாவியே’ என்று குகையை அடைத்த வானர வீரரும் தவறிலர்:

வல்லார் சொற்படி பதவி ஏற்றுக்கொண்ட வானரத் தலைவனும் சுக்கிரீவனும்.

## தவறிலன் :

தான் வெளிவராதபடி அடைக்கப்பட்ட குகை வாயிலை உடைத்துக் கொண்டு வெளியேறிய வாலியும் தவறிலன்.

சூழ்நிலையே, அனைவர்க்கும் சூழ்வினையாயிற்று.

சூழ்நிலை, சூழ்வினையை எதன் மூலம் உருவாக்குகிறது?

இதற்குக் கிடைத்த மூலம்தான் ஐய உணர்வு.

முதலில் வெளியில் இருந்த வானர வீரர்களிடம் புகுந்தது ஐயம். இவர்களைத் தவறான வழிக்குத் தள்ளிய பிறகு, வாலியின் உள்ளத்தில் புகுந்து கொண்டுவிட்டது.

ஐயத்திற்கு அகப்பட்ட அனைவர்களும் வினையினால் சூழப்பட்டவர்கள் ஆயினர்.

'ஆகவே, சூழ்நிலையே, நல்லவர்களை அல்லவர்களாக அலைக்கழிக்கும்' என்பதைக் கவிச்சக்கரவர்த்தி இந்நிகழ்ச்சியின் மூலம் உலகுக்குத் தெளிவாக்குகின்றார்.

## தவறான முடிவு :

வெளியேறிய வாலியிடம். நல்லவர்கள் அனைவரும் நடுங்கிக் கொண்டே, நடந்த உண்மையை எடுத்துரைத்தனர்: நம்பத் தயாராக இல்லை வாலி.

குகை வாயிலை அடைத்த செயல்தான், அவன் உள்ளத்து எழுந்த ஐயத்தை, தவறான முடிவிற்குக் கொண்டு சென்றுவிட்டது.

'அம் முடிவு, அவனையே முடிக்கப்போகிறது' என்பது அப்போது, எப்படித் தெரியும்'.

நடந்த உண்மையை எடுத்துரைக்கத் துணிந்த தம்பி சுக்கிரீவன்,

''வணங்கி, அண்ணல்! நின் வரவு இலாமையால்,

உணங்கி, உன்வழிப்படர உன்னுவேற்கு,

இணங்கர் [இணக்கம்] இன்மையால்', இறைவ! நும்முடைக்

கணங்கள், 'காவல் உன் கடன்மை'' என்றனர்''.

அதனால்தான், பதவி ஏற்றனன்: குற்றத்தை, பொறுக்க! பொறுக்க! என்று மன்றாடிப் பார்த்தான்.

அப்பேச்சைக் கேட்கத் தயாராகாதபடி, ஐயம், வாலியைத் தயார்ப் படுத்திவிட்டது.

ஐய உணர்வால் தயார்ப்படுத்தப்பட்ட வாலி, சுக்கிரீவனைக் கொல்லவும் தயாரானான்.

யார் ஒருவன், உண்மை உள்ளவனைக் 'கொல்வேன்' என்று அறத்திற்கு மாறாக, முற்படுகின்றானோ, அவனை அறக்கடவுளே கொன்றுவிடும்'' இது இயற்கை நியதி.

நியதியை நிறைவேற்ற, கால தேவதை கணக்கிட்டுக் கொண்டிருக்கும்.

ஆதலால், வாலியின் மரணத்திற்கு முதற்காரணம், ஐயம்: அதன் தோற்றத்திற்குக் காரணம் சூழ்நிலை ஆகும்.

## துணைக் காரணம் :

முதல், காரியம் ஆவதற்குக் கருவிகள் வேண்டும். மண்குடமாவதும், பொன் ஆபரணம் ஆவதும் கருவிகளால்தான். அந்தக் கருவிகள், இருக்கும் இடத்திற்கு, முதல்போக வேண்டும். அல்லது முதல் இருக்கும் இடம் நோக்கிக் கருவிகள் வரவேண்டும்.

கருவிகளும், முதலும் சேர்வதற்கு கால இடைவெளியும் வேண்டியிருக்கும். இரண்டன் சந்திப்பில் காரியம் வெளிவரும்.

## இரலை மலைக் குகை (ருசிய முகப்பர்வதம்) :

துணைக் காரணத் தோற்றத்திற்கு ஏற்ற இடமாக, ருசிய முக மலையை, காலதேவதையே அமைத்துக் கொடுத்துவிட்டது.

வாலியின் வன்திறலுக்கு எதிர் நிற்கும் ஆற்றல் அற்றவனாய் சுக்கிரீவன், எங்கும் போய் ஒதுங்குவதற்கு இடம் கிடைக்காமல், அம் மலைக் குகையை, அச்சமற்ற இடமாக்கிக் கொண்டான்.

அஞ்சி அஞ்சி ஓடிவரும் ஒருவனை, ஆதரிக்கும் இடம் எங்கேயோ

ஓர் இடத்தில் இருப்பதால்தான், ஆபத்தினின்றும் மனிதன் தப்பித்துக் கொள்ள முடிகிறது.

யார்க்கும், எதற்கும், எக்காலத்தும் அஞ்ச வேண்டிய அவசிய மற்றவனாய் வாழ்ந்த வாலியின் செயலே, தனக்கு அஞ்சி ஓடிச்செல்லும் சுக்கிரீவனுக்கு, நல்லதோர் புகலிடத்தைத் தேடி வைத்திருந்தது.

யார் ஒருவன், 'தன்னை மிஞ்சியவன் எவனும் இல்லை' என்று ஆணவத்தோடு செயல்படுகின்றானோ, அவன் செயலைக் கொண்டே, அவனை அடக்குவதற்குரிய சூழ்நிலையைக் காலக் கடவுள், உருவாக்கி வைத்துவிடும்.

ஆணவத்தால், மித மிஞ்சித் திரியும் அவன், கால தேவதை நடத்தும் நடத்திக் கொண்டிருக்கும் செயலைப் புரிந்து கொள்ள முடியாது.

துந்துபி என்ற அசுரன், தன் ஆற்றலை எதிர்க்கும் வல்லமை உடையவர்கள், எங்கு தேடியும் இன்மையின், இங்கு (கிட்கிந்தை) வந்தான். வாலியுடன் மோதினான். மோதுகையில், வாலிக்கு முன்னால் ஏதும் அற்றவனாய் அழிந்தான் துந்துபி.

அழிக்கச் செல்பவன் அழிவான் என்பதுதான் உண்மை.

அழிந்த துந்துபியை அப்படியே விட்டுச் சென்றிருக்கலாம் வாலி.

ஆனால், அதற்கு மேல் அவன் செய்த செயல்தான், அவன் அழிவிற்குக் காரணமாகிறது. தன் செயலைக் கொண்டே, தன்னை அழித்துவிடத் திட்டமிட்டுக் கொண்டிருக்கும் காலக் கடவுளின் கணிப்பை, மனிதன் எங்கே உணரப்போகிறான்? வாலி மட்டும் அதற்கு விலக்கா?

வாலியின் உடலை உயிரற்றதாக்க வந்த துந்துபி, தான் அந்த நிலையை எய்திவிட்டான்.

துந்துபியின் உயிரற்ற உடலில், மேலும் தன் வல்லமையைக் காட்ட விரும்பினான் வாலி தன் விருப்பத்தை; அவ்வுடலைத் தூக்கி,

அப்பால் எறிதலின் மூலம் நிறைவேற்றிக் கொண்டான்.

எறியப்பட்ட அவ்வுடல், வாலியின் விருப்பினை, அப்போதைக்கு நிறைவேற்றி, எப்போதைக்கும் உரிய வெறுப்பினை மதங்கர் முனிவர் மூலம் ஏற்படுத்தி வைத்துவிட்டது.

உலக நல்வாழ்விற்கென்றே, ஆமைபோல் ஐந்தடக்கித் தவம் செய்பவர்கள் மாமுனிவர்கள். புலன் ஐந்தும், பொறிகள் மூலம் நடத்தும் விளையாடல்கள் எல்லாம், அவர்களிடத்தில் ஒன்றும் பலிக்காது.

அதனால்தான், அவர்கள்பால், குறும்பு செய்பவர்கள் மேல் இடும் சாபம் பலிக்கின்றது.

தான் இருக்கும் இடத்தை; எவன் ஒருவன், இந்த மாமிசப் பிண்டத்தின் மூலம் தூய்மை இழக்கச் செய்தானோ, அவன் இவ்விடத்தை அணுகினால், தன் தலையை இழப்பான். எறியப்பட்ட தசைப் பிண்டம் எப்படிச் சிதறி விழுந்ததோ, அது போன்றே, அதனை இங்கு வீசி எறிந்தவனும் தலைவெடித்துச் சிதறிப் போவான்.

அதுமட்டும் அல்ல! என் தூய்மை இடத்தைக் கெடுத்தவன் கல் நெஞ்சினன். அதனால், அவனைச் சார்ந்தவர்கள் யாராவது இங்கு வந்தால், அவர்கள் கல் வடிவம் ஆகக் கடவர்.

இது, ருசியமுக மலையில் தவஞ்செய்து கொண்டிருந்த மதங்க முனிவர் இட்ட கடிய வேகச் சுடுசரத்தை நிகர்த்த சாபச்சொல்.

அண்ணனுக்குக் கொடுக்கப்பட்ட சாபமே, தம்பியின் பாதுகாப்பிற்குரிதாயிற்று.

புலன் ஐந்தும் பொறி கலங்கி, அறிவு அழிந்து, செல்லும் நெறி இன்னது என்று உணர முடியாது, அச்சத்தினால் கவ்வப்பட்ட சுக்கிரீவனுக்கு, நல்லதோர் புகலிடத்தினை, அவனை ஓட ஓடத் துரத்திய வாலி

யின் செயல் மூலமாகவே, நிர்மாணித்து வைத்திருக்கும் கால தேவதை யின் கணிப்பை என்ன என்று வியப்பது!

சூழ்நிலை எவ்வாறு உருவாகிறது? யாருக்குத் தெரியும்?

**சரணம் :**

'திக்கற்றவர்க்குத் தெய்வமே துணை' என்பது வாழ்க்கைக்கு நல் வழி காட்டும் அறிஞர்களது அனுபவமொழி. தம் அனுபவத்தில் கண்ட உண்மைகளைத்தான் பெரியோர்கள், அனுபோகமாக்குவார்கள்.

அனுபவத்தில் கண்டதெல்லாம், உண்மையாகிவிடுவதில்லை. அனு பவத்தின் தெளிந்த முடிவாக இருப்பது எதுவோ அது அனுபோகம்.

நம் நாட்டுப் பண்டைப் பெரியோர்கள், தம் சந்ததியரின் வாழ்க் கைக்கோர் பற்றுக் கோடாக, எம்மொழியை உரைத்துச் சென்றார்களோ, அதனையே திக்கற்ற சுக்கிரீவன் பற்றிக் கொண்டு ருசியமுக மலைக் குகைக்குள், செயலற்றுக் கிடந்தான்.

திக்கற்றவர்களுக்குத் துணையாக வரும் தெய்வம், எந்த உருவில், எந்த இடத்திற்கு, எந்தக்காலத்து வந்து உதவும் என்பது யாருக்கும் தெரிவதில்லை. திக்கற்ற சுக்கிரீவனுக்குத் துணையாக வரும் தெய்வமும், அவன் நிலைக்கு ஏற்றபடியே வந்தது.

துக்கத்தில் துவண்டு கிடக்கும் சுக்கிரீவனுக்குத் துணையாக வரும் தெய்வமும், 'தனக்குத் துணையாவார் யாவர்?' என்று துவண்டு கொண்டா வரவேண்டும்?

எந்த மூலப்பரம் பொருளின் ஆணை வழிச் செயல்பட்டுக் கொண் டிருக்கிறதோ, அந்தக் கால தேவதை, அந்தப் பரம்பொருளையே, துக் கத்திற்குள்ளாக்கி, சுக்கிரீவன் முன் கொண்டு வந்து நிறுத்திவிடுகிறது.

இந்தக் காலகட்டம் 'யாருக்கு யார் துணையாவது?' என்பதை எளிதில் தெரிந்துகொள்ள முடியாத ஒரு நிலையில் அமைந்துள்ளது.

வந்தவன் இருந்தவனைத் துணையாகப் பற்றுவதா? இருந்தவன் வந்தவனைத் துணையாகப் பிடித்துக் கொள்வதா?

யார் யாரைச் சரணம் அடைவது?

வந்தவன்தான், மலைக்குகையில் இருந்தவனிடம் உதவி கேட்கின்றான்,

"மையறு தவத்தின் வந்த
சவரி, இம் மலையில், நீ வந்து
எய்தினை இருந்த தன்மை,
இயம்பினள் : யாங்கள் உற்ற
கையறு துயரம் நின்னால்
கடப்பது கருதி வந்தோம்!
ஐய! நின் தரும் ......................"

(கம்-3809-நட்பு-24)

என்பது, இராமன் கூறிய முதல் மொழி.

'குற்றம் அற்ற தவத்தில் பழகி வந்த சவரி, எங்களுக்கு, நீ இருக்கும் இந்த இடத்திற்கு வழி காட்டினாள். நாங்கள் செயலற்றுப் போகக் கூடிய பெரும் துன்பத்திற்கு உள்ளாகி இருக்கிறோம். அந்தப் பெரும் துயரம் உன்னால்தான் போக்க முடியும் என்பதை உணர்ந்து உன்னிடத்திற்கு வந்துள்ளோம். உன்னுடைய துணை, எங்கள் துயர் துடைக்கும் என்பதில் நம்பிக்கை உள்ளது.

யார் ஒருவர், எல்லோருடைய துயரங்களையும் அறுக்கும் சுடரடியை உடையவரோ, அவரையே, அஞ்சிக் கிடக்கும் ஒருவனிடத்தில் வந்து, 'ஐய! நின்தீரும்! என்று சொல்ல வைக்கும் இந்தக்கால தேவதையின் ஆற்றலை என்ன என்று வியப்பது!

அஞ்சி அஞ்சிச் செத்துக் கொண்டிருக்கும் சுக்கிரீவன் இருக்கும் இடம்தான், செல்லும் இடம் தெரியாது திகைத்துக் கொண்டிருக்கும் இராம லக்குமணர்களுக்கு, சவரி காட்டியதாகும்.

யாவர்க்கும் வழி காட்டும் மூலப் பரம் பொருளுக்கும் வழிகாட்டி தேவைப்படுகிறது.

அனைவரது துன்பங்களையும் இல்லாதபடி செய்கின்ற, அப்பரம் பொருளுக்கு, தன் துன்பத்தைப் போக்க ஒரு துணை தேவைப்படுகிறது.

'மானுட வடிவத்தில் வந்தவர்கள் யாராக இருந்தாலும், வழி காட்டி இல்லாமலும், துணை இல்லாமலும் வாழ்க்கை நடத்த முடியாது' என்ற பேருண்மையை, இந்நிகழ்ச்சி உணர்த்துகிறது.

**சவரி :**

மையறு தவத்தின் வந்த சவரி - குற்றமற்ற தவம் செய்த சவரி: மதங்க முனிவர் ஆசிரமத்தில் தொண்டு செய்து கொண்டிருந்தவள்: அவரையே, வழி காட்டும் ஆச்சாரியராகக் கொண்டவள்: ஆச்சாரிய வழிபாட்டின் பயனாக, தெய்வத்தை இராம இலக்குமணர் கோலத்தில் தரிசித்தவள்

ஆச்சாரிய வழிபாட்டினால், தன்னைத்தேடிவந்த தெய்வத்துக்கே வழி காட்டும் பெருமை பெற்றாள்; தான் கடித்துச் சுவை பார்த்துத் தேர்ந்தெடுத்து வைத்திருந்த நாவல் பழத்தை, தனக்குத் தரிசனம் அளிக்க வந்த தெய்வமே ஏற்றுக் கொள்ளும் சிறப்பிற்குரியவளானாள்.

இவளுடைய ஆச்சாரியரது ஆசிரமச் சுற்றுப்புறத்தை (மதங்க முனிவர்) சுக்கிரீவன் சேர்ந்திருந்தால், இராமனே வந்து, தன் துணை வேண்டும் பெருமையைப் பெறுகின்றான்.

'ஐய! நின்தீரும்' என்ற இராமனது தொடரைத்தான், சுக்கிரீவன் தொடர்ந்து, இராமபிரானைச் சரணம் அடைந்தான்.

ஆச்சாரிய வழிபாடே, ஆண்டவனை அழைத்து வந்து, வழிபடு பவரிடம் சேர்ப்பிக்கும் என்ற சமயப் பேருண்மையை, இந்நிகழ்ச்சியின் மூலம் உணர்த்துகின்றார் கம்பர்.

சுக்கிரீவன் சரணம்தான், வாலியின் மரணத்திற்கு, துணைக் காரணப் பொறுப்பை வகிக்கிறது.

தருமம் :

'முரணுடைத் தடக்கை ஓச்சி,
முன்னவன் பின்வந் தேனை,
இருள் நிலைப் புறத்தின் காறும்,
உலகு எங்கும் தொடர, இக்குன்று
அரண்உடைத் தாக உய்ந்தேன்;
ஆர்உயிர் துறக்க லாற்றேன்,
சரண்உனைப் புகுந்தேன்; என்னைத்
தாங்குதல் தருமம் என்றான்.

(கம். 3810 - நட்பு. 25)

ஆவியை - சனகன் பெற்ற அன்னத்தை - அமிழ்தின் வந்த தன் தேவியைப் பிரிந்து, தாங்க ஒண்ணாத் துயரத்தோடு, திகைத்து வந்திருக்கும், இராமனிடத்தில், 'என்னைத் தாங்குதல் தருமம்' என்று வற்புறுத்துகின்றான் சுக்கிரீவன்.

நிலை தடுமாறிக் கொண்டிருக்கும் தருமத்தை நிலைநாட்ட வந்தவன்தான் இராமன்.

ஆனால், தருமம் இந்த இடத்தில் எவ்வாறு நிலை மாறியுள்ளது என்பதை முழுமையாக அறிவிக்கப்படும் முன்பே, 'நீ என் இன் உயிர்த் துணைவன்' என்று இராமபிரான் உறுதிமொழி கொடுத்துவிட்டான்.

அது மட்டும் அல்ல!

''வானிடை மண்ணில் உன்னைச்
செற்றவர், என்னைச் செற்றார்;
தீயரே எனினும், உன்னோடு
உற்றவர் எனக்கும் உற்றார்

என்றும் உறுதிமொழி கொடுக்கப்பட்டுவிட்டது.

'சுக்கிரீவனது பகைவன் யார்? அவன் எத்தகைய இயல்பினன்?' என்பதை அறிந்து கொள்ளாமல் இப்படி உறுதி கொடுக்கலாமா? என்ற கேள்வி வருவது இயல்பு.

இராமன், தருமம் எப்படி குலைக்கப்பட்டிருக்கிறது என்பதை, சுக்கிரீவனது முதல் மொழியிலேயே புரிந்துகொண்டு விட்டான். தருமம் காக்க வந்தவன் அல்லவா இராமன்!

எப்படி?

எத்தகைய நிலையினனாக இருந்தாலும், ''சரண்'' உனைப் புகுந் தேன்' என அடைக்கலம் ஆகிவிட்டால், அவனை எப்பாடுபட்டாயினும் காப்பது இராமன் மேற்கொண்டுள்ள தருமம்.

மற்றொன்று.

அண்ணன் தம்பியை அணைத்துக்கொள்வது தருமம். வலியவன் எளியவனை இணைத்துக்கொள்வது தருமம். அச்சத்தினால் முதுகுகாட்டி ஓடிக் கொண்டிருக்கும் ஒருவனை, அழைத்து ஆறுதல் கூறுதல் தருமம்.

இந்தத் தருமம் இங்கு எப்படி நிலை குலைந்துள்ளது? அண்ணனாகிய வாலி, தம்பியாகிய சுக்கிரீவனை அடித்துத் துரத்தியதாலும், வலியனாகிய வாலி, எளியனாகிய சுக்கிரீவனை வாட்டியதாலும், புற

முதுகு காட்டி ஓடுபவனை, ஓட ஓடத் துரத்தியதாலும், தருமம் தகர்க்கப் பட்டுள்ளது.

இதனை நன்கு உணர்ந்து கொண்ட இராமபிரான், அபயம் வேண்டிய சுக்கிரீவனுக்கு, உடனே அடைக்கலம் ஈந்தான்.

சுக்கிரீவன் இம்மலைக் குகையில் அஞ்சிக் கிடக்கும் நிலைமை, அதர்மம் தலைதூக்கி நிற்கிறது என்பதை உணர்த்துகிறது. அதனை உணர்ந்து கொண்ட இராமபிரான், அதர்மத்தை அழிக்கத் துணிவு கொண்டான்.

வாலியின் மரணத்திற்கு, இப்படி ஒரு உறுதியான (கருவி) துணைக்காரணம் தயாராகிவிட்டது.

தன் வலிமையையே நம்பிக் கொண்டிருக்கும் வாலிக்கு, இது எல்லாம் எப்படித் தெரியும்?

## நிமித்த காரணம் :

'கருத்தாவாம் தன்மை ஏதுவாய் இருப்பது' என்பது இதன் பொருள்.

வாலியின் மரணத்திற்குக் கருத்தா யார்? அவர் கருத்தா ஆவதற்கு அவரிடம் அடங்கியிருந்த தன்மை என்ன? அந்தத் தன்மை செயல்படு தற்கு ஏது (காரணம்) வாக அமைந்தது எது?

வரம்பற்ற ஆற்றலினான வாலியை, மரணத்தைத் தழுவச் செய்யும் ஆற்றல் யாரிடம் இருக்கிறதோ, அவர்தான் இச்செயலுக்குக் கருத்தாவாக அமைய முடியும், அவரிடம் குடி கொண்டுள்ள தன்மை, வாலியின் செயலை, மரணத்திற்குக் காரணமாக ஏற்றுக் கொள்ள வேண்டும்.

கருத்தா, தன்மை (இயல்பு) ஏது (காரணச் செயல்) இந்த மூன்றையும் ஒன்றாக்கி, செயல்படுத்துதற்கு ஒருவர் வேண்டும். அவர், மிக

மிகச் சொல்லாற்றல் படைத்தவராக இருக்க வேண்டும்.

நிரந்து இனிது சொல்லுதல் வல்லார் ஒருவரைக் கண்டுபிடித்து, அவரிடம் இவ்வேலையை ஒப்படைத்து விட்டது காலதேவதை.

கால தேவதையால் தேர்ந்தெடுக்கப்பட்டவர் இவ் வேலைக்கு மிக மிகப் பொருத்தமுள்ளவராகவே அமைந்தார். தன் வேலையைச் செய்வதற்கு, தக்க சந்தர்ப்பம் கிடைத்தது; வேலையைத் திறம்படச் செய்து முடித்துவிட்டார்.

சந்தர்ப்பம்: (1)

மலைக் குகையில் அஞ்சிக் கிடந்த சுக்கிரீவனுக்கு, அபயம் கொடுக்க இராமனை அழைத்து வரும் அனுமன், முகமன் உரை கூறுகின்றான்.

இரவிதன் புதல்வன் தன்னை
இந்திரன் புதல்வன் என்னும்
பரிவிலன் சீற, போந்து
பருவரற்கு ஒருவன் ஆகி,
அருவி அம் குன்றின், என்னோடு
இருந்தனன்: அவன்பால் செல்வம்
வருவது ஓர் அமைவின் வந்தீர்:
வரையினும் வளர்ந்த தோளீர்!

இரவிதன் புதல்வன் - சுக்கிரீவன் (இரவி-சூரியன்)
இந்திரன் புதல்வன் - வாலி.
பரிவிலன் - அன்பற்றவன் (பரிவு-அன்பு)
பருவரற்கு ஒருவன் - துன்பத்திற்கே உரிய ஒருவன் சுக்கிரீவன்
பருவரல் - துன்பம்.

கம்பன் அறநிலை
KAMBAN TRUST
KARAIKUDI- S.RY

அனுமன் கூறிய முகமன் உரையே, சுக்கிரீவனையும் இராமனையும் இணைத்து வைப்பதற்குரிய முழுமை உரையாகும். சொல்லின் செல்வன் அல்லவா அனுமன்?

இராமபிரான் கொடுத்த இப்பட்டத்திற்கு 'நான் தகுதியுடையவன்' என்பதைச் சொல்லாமல் சொல்லி, உணர்த்துகின்றான் அனுமன்.

கவிச்சக்ரவர்த்தி, அனுமனின் சொல்லாற்றலை இக்கவிதையின் மூலம் நன்கு புலப்படுத்தியுள்ளார். புலவர்களுக்கு, புலனாகும் அனுமனின் சொல்திறன்.

அன்பு செலுத்த வேண்டிய [இரக்கம் காட்ட வேண்டிய] அண்ணன், தம்பியிடம் கோபத்தைக் காட்டினான், வாலியின் சீற்றம் [கோபம்] சுக்கிரீவனைத் துன்பத்திற்குள்ளாக்கியது. உள்ளத்துள் புதைந்து கிடந்த சுக்கிரீவனது, துன்பம், கண்களின் வழியாக நீராய்ப் பெருகுகிறது.

அவனது துன்பத் தோற்றம், அருவி பெருகிவரும் இம்மலைக்கு எடுத்துக் காட்டாய் உள்ளது. (அருவிசோர்குன்று; 'இன்' உவம உருபு)

இத்தகைய ஆராத் துன்பினன், என்னோடுதான் இங்கு உள்ளான். அவன்பால் நீங்கள் வருகின்றீர்கள். உங்கள் வருகை, அவனுக்குச் செல்வ (திருமகள்) வருகையாகும்.

வருகின்ற நீங்களோ, மலையினும் [வரை-மலை) உயர்ந்த தோள்களை உடையவர்களாய்த் தோற்றம் அளிக்கின்றீர்கள்.

அனுமன் இராமபிரானுக்கு அளித்த வரவேற்புரை இது.

இது, அவனைச் சொல்லின் செல்வனாக காட்டுவது எப்படி? காண்போம்.

வாலியும் சுக்கிரீவனும் சகோதரர்கள். ஒரு தாய் வயிற்றுப் பிள்ளைகள். ஆனால் தந்தையர் இருவர்.

சுக்கிரீவன் சூரியன் புதல்வன்: வாலி இந்திரன் புதல்வன். அவ் வவர்களது தந்தையின் இயல்பை, மைந்தர்கள் பெற்றுள்ளார்கள்.

சூரியன், தன்னுடைய கடமையை [உலகிற்கு ஒளி வழங்கி ஆளும் கட்சி] ஒழுங்காக, முறையாக, நெறி தவறாமல் செய்து வருகின்றான். அவனிடம் யாரும் எக்குறையும் காண இயலாது. குறைகாண்பார்களே ஆனால், அவரே குறையுடையார்.

காலதேவதையால் கொடுக்கப்பட்ட, வேலையில், சூரியன் சிறிது தவறு செய்தாலும், [கடமை தவறினால்] காலக் கோளாறுகள் பல ஏற்பட்டு விடும். ஆகவே, அவன் ஆட்சிச் செம்மையால்தான், காலத்தையே காண முடியும். இது சூரிய சித்தார்தம்.

இத்தகைய கடமைக்குரிய [கர்ம வீரனாய] வனான சூரியன் புதல்வனும், தன் செயலால், தந்தையின் பெயரைக் காப்பாற்றிக் கொண்டு வந்தான்.

வாலியால், முன்பு அன்போடு ஒப்படைக்கப்பட்ட கிட்கிந்தை அரசை, நெறி தவறாமல் நடத்தியதன் மூலம், கடமையைச் செய்யும் கர்ம வீரனாய்த் திகழ்ந்தான் சுக்கிரீவன்.

குறை அற்றவனாய இச்சுக்கிரீவனிடம் குற்றம் கண்ட வாலி, இந்திரன் புதல்வன்.

பிறர்க்குரியதைத் தனக்குரியதாக்கும் பெருவிருப்பினன் இந்திரன். தன் விருப்பத்தை நிறைவேற்றிக் கொள்ள, நெறி பிறழவும் துணிபவன்.

வானவர்களுக்கெல்லாம் அரசனாக (தேவராஜன்) அமரும் பதவியில் இருப்பினும், தன் விருப்பத்தை நிறைவேற்றிக் கொள்ள வழியல்லா வழியிற் செல்பவன் வாலியின் தந்தை.

தன் முறையற்ற செயலால், பிறர்க்கு வரும் பழியையும், அவமானத்தையும் பாரான்.

தந்தை வானவர் தலைவன்; மைந்தன் வானரர் தலைவன்.

எதிரதாக் காக்கும் அறிவு அற்றவனாய், ஐம்புலன் இன்பத்திற்கு ஆட்பட்டவனாய், உருமாறிச் சென்று கற்புச் செல்வியாய அகலிகையைக் களங்கப்படுத்தி, அவளை உரு (கல்லுரு) மாற்றியவன் இவன் தந்தை.

இத்தகைய இந்திரன் புதல்வன் வாலியும், அப்பாவின் இப்பாவச் செயலை, தப்பாமற் செய்பவனாய் உள்ளான்.

கௌதம மாமுனிவரின் மனைக்கு மங்கலமாய் வாழ்ந்து வந்த இல்லத்தரசி அகலிகையைப் பங்கப்படுத்தி, அவருடைய சாபத்திற்கு உள்ளானான் இவன் தந்தை இந்திரன்.

இவ்வாலியும், சுக்கிரீவனால் கைத்தலம் பற்றப் பெற்ற அருமை மனைவி ருமையைத் தனக்குரிமையாக்கிக் கொண்டு விட்டான். சுக்கிரீவனும், தம்மின் சுவை மடவாரைப் பிறர் கொள்ளத் தாம்விட்டு, வெம்மின் ஒளி வெயில் கானகம் போய்க் குமை தின்பாரைப் போன்றவனாயினான் (குமை-புல்)

என் செய்வது! கௌதமரைப் போன்று சாபம் இடும் ஆற்றல் இவனிடம் இல்லை.

சாபம் (வில்) இடும் ஆற்றல் உன் கையில் தான் இருக்கிறது இராமா! வாலி உன் சாபத்திற்கு [வில்] உள்ளாவது தானே பொருத்தம்.

இந்திரன், 'அகல் விசும்புளார் கோமானாக' இருந்தும், ஐந்து அவியாது, சென்று, தான், சாபம் பெற்றதோடன்றி, மெல்லியளாய அகலிகையும் கல்லுருப் பெறுமாறு செய்து விட்டான்.

இராமா, அவன் செய்த அடாச் செயலால், கல்லுருப் பெற்ற காரிகையை, மீளவும் நல்லுருவினளாக்கியது உன் திருவடிகள் தானே!

உன் திருவடித் தொடர்பால், இந்திரன் விளைவித்த பாபக் களங்கம்

நீங்கி, அகலிகை, மீண்டும் தன் அருமைக் கணவர் கௌதமரை அணுகி ஆனந்தம் பெற்றாள்.

இராமா! கல்லைப் பிசைந்து கனி [கன்னி-பெண்] யாக்கும் வல்லமை பெற்ற உன் கால்கள் இங்கும் அத்தனையதோர் நற்பேற்றினை நல்க வேண்டும்.

பாபம் செய்த வாலிக்கு, உன்தடக்கைச்சாப [வில்] ஆற்றலைக் காட்ட வேண்டும். உடனே, உன் கைவண்ணத்தை அங்கேயே கண்டு கொள்வான் வாலி.

அதன் பயனாக, உன் கால் வண்ணத்தின் பெருமையைக் காட்ட, அவனால் களங்கப்படுத்தப்பட்ட 'ருமை' தன் அருமைக் கணவன் சுக்கிரீவனை வந்து அடைந்துகொள்வாள்.

இதைச் செய்வதற்குரிய கடமையை, இராமா! நீதான் ஏற்றுக் கொள்ளவேண்டும்.

ஏன்?

தாக்கப்பட்டவன் உன் குலத்துக்குரிய [சூரிய வம்சம்] முதல்வனாய சூரியன் புதல்வன்.

தாக்கியவன் பிறன்மனை நோக்கும் பாபியின் [இந்திரன்] புதல்வன்.

தாக்கப்பட்டவனைத் தாங்குவது உங்கள் குலத்துதித்தோர்க்குரிய [சூரிய வம்சம்] தருமம்தானே!

அந்தத் தருமத்தை, இங்கு [கிட்கிந்தை] நீ நிலைநாட்டுவதன் மூலம்,

''எளிது என இல் இறப்பான், எஞ்ஞான்றும் விளியாது நிற்கும்

பழியை எய்துவான்'' என்ற பேருண்மையை உலகுக்கு எடுத்துக் காட்டி விடலாம்.

'அறம் தலை நிறுத்த வந்த நீ, இராமா, இதனை, எப்படியும் உன் கடமையாகக் கொள்வாய்' என்ற நம்பிக்கை எனக்கு வருகிறது.

உன் 'வரையினும் வளர்ந்த தோள்' என் உள்ளத்தில் அந்த நம்பிக்கையை வளர்க்கிறது.

என்னோடு உள்ள சுக்கிரீவன், துன்பத்தால் (அருவிக் கண்ணீர்) மலைத் தோற்றத்தினன்.

நீரோ (அவனுக்குத் துணை நிற்கும்) தோளாற்றலால் மலைத் தோற்றத்தினர்.

குலத்தாலும் (ஆதித்தன் குல முதல்வன்) தோற்றத்தாலும், இருவரும் ஒத்துள்ளீர்கள். அதனால், 'உங்கள் உணர்ச்சிதான் நட்பாம் கிழமை தரும்' என்று உணர்கின்றேன்.

அனுமன் கூறிய முகமன் உரை, இவ்வளவு கருத்தையும் உள்ளடக்கிக்கொண்டு, இராமபிரான் செவியின் வழிபுகுந்து, உள்ளத்தில் தங்கி, அப்பெருமானைச் செயலாற்றத் துணிய வைத்துவிட்டது.

## சந்தர்ப்பம்: [2]

கடந்த கால நிகழ்ச்சியை, வெளியிட வேண்டுவோர், தக்க சந்தர்ப்பத்தை எதிர்பார்த்துக் கொண்டிருக்க வேண்டும்.

காலம் அறிந்து இடம் அறிந்து பேசினால், பேசிய சொற்கள், உணர்வுப் பொருளோடு, கேட்போர் உள்ளத்தில் தங்கும்.

அப்படி அவை அறிந்து பேசி, கேட்பாரைப் பிணிக்கும் சொல்வல்லான் அனுமன்.

'வாலி மரணத்தின் பக்கம் திரும்ப வேண்டியவன் தான்: சுக்கிரீவன் சரணத்திற்குரியவன் தான்' என்பதை, இராமனிடம் வற்புறுத்துவதற்கு மேலும் ஒரு வாய்ப்பு கிட்டியது சொல்லின் செல்வனாய அனுமனுக்கு.

இராம சுக்கிரீவ நட்புக்குப் பிறகு விருந்துக்கு ஏற்பாடாகியது.

விருந்துக்குரிய உணவுப் பதார்த்தங்களாகிய, கனி, கிழங்கு, காய், கந்தம் முதலியன பரிமாறப்பட்டன. பரிமாறும் தொழிலில் ஈடுபட்டிருந்தவர்களைக் கண்டதும் இராமபிரானுக்கு ஓர் ஐயம் தோன்றியது.

இந்த ஐயத்திற்குக் காரணம், தமிழ்நாட்டு விருந்தோம்பும் முறை காணப்படாமையே.

ஓம்பும் விருந்து, நல் விருந்தாக அமைய வேண்டுமானால், இல்லில், இன் நோக்கியர் [வீட்டுக்குரிய மங்கலமாகிய மனைவி]வந்த விருந்தினர்களுக்கு உணவு பரிமாற வேண்டும். அப்போது தான் விருந்து பரிமளிக்கும். அழைத்து வந்த விருந்தினரும் போற்றப்பட்டவராவார்.

இங்கு, உணவு பரிமாறியவர்கள் வேலைக்காரர்கள். அதனால், தன் சந்தேகத்தைத் தீர்த்துக் கொள்ள விரும்பிய இராமன்,

> 'இருந்து நோக்கி, நொந்து, சிந்தித்து,
> "பொருந்து நன்மனைக்கு உரிய பூவையைப்
> பிரிந்துளாய் கொலோ நீயும் பின்?"

என்று கேட்டான். [பூவை-பெண்]

இராமபிரான் கேட்ட இந்தக் கேள்வி, அனுமனுக்கு, உண்மையை உள்ளபடி வெளியிடுவதற்கு நல்ல வாய்ப்பளித்து விட்டது.

இந்தக் கேள்விக்குக் கிடைத்த பதில், இராமனை, வாலியின் மரணத்திற்கு நிமித்தமாக்கிவிட்டது.

சொல்லின் செல்வன் வாய்வழி வந்த பதில், இராமபிரான் உள்ளத்தைப் பிழிய வைத்து, வையம் நுங்கிய வாய் இதழைத் துடிக்க வைத்து விட்டது: மலர்க் கண்களை, சினத்தினால் சிவக்க வைத்து, வாலியின் பக்கம் திருப்பி வைத்துவிட்டது.

அப்படிப்பட்ட பதில் என்ன!

யாரை இச்செயலுக்கு நிமித்தனாக்க வேண்டுமோ, அவன் தன்மை அறிந்து, தூண்டுவதற்கு ஏதுவாகிய ஒன்றை எடுத்துக் காட்டும் சொல்வல்லான் அனுமன்.

அதனால், அவன் பேசிய பதில் வார்த்தை அவ்வளவு வன்மை உடையதாயிற்று.

"நின்ற நீதியாய்! நெடிது கேட்டியால்!
ஒன்று, யான் உனக்கு உரைப்பது உண்டு."

என்ற முன்னுரையோடு சொல்லத் தொடங்கிய அனுமன், இடையில், வாலியின் நீதிக்கு மாறான செயல்களைச் சொல்லி, இறுதியாக,

'உருமை என்று இவற்கு உரிய தாரம் ஆம்
அருமருந்தையும் அவன் விரும்பினான்:
இருமையும் துறந்து, இவன் இருந்தனன்:
கருமம் இங்கு இது: எம் கடவுள்!"

என்று முடித்தான்.

## இராமன் உள்ளம்:

'பிறன் மனை நோக்காத பேராண்மை, அறம்; அது மட்டும் அல்ல! ஆன்ற ஒழுக்கமும் அதுவே'.

'இந்த அறமும் ஒழுக்கமும் ஆக அமைந்த ஆண்மையைத் தன் வாழ்க்கையில் கடைப்பிடித்து நடவாத அரசன், எவனாக இருப்பினும் அவன் அழிக்கப்படுதற்குரியவனே' என்பதுதான் இராமபிரானது உள்ளத்தை இச்செயலைச் செய்யத் துணிய வைத்துவிட்டது.

"ஈரம் நீங்கிய சிற்றவை சொற்றனள் என்ன,
ஆரம் வீங்கு தோள் தம்பிக்குத் தன்அரசு உரிமைப்
பாரம் ஈந்தவன், 'பரிவு இலன், ஒருவன் தன் இளையோன்
தாரம் வெளவினன்' என்ற சொல் தரிக்குமாறு உளதோ?"

என்று, கவிச்சக்ரவர்த்தி, இராமன் துணிந்த துணிவிற்குக் காரணம் காட்டுகின்றார்.

இரக்கமற்ற, தன் சிறிய தாய் கைகேயி சொன்னதற்காக, தனது அரசு உரிமையை, தன் தம்பிக்குக் கொடுத்து வந்த இராமன் - 'பாராளும் படர் செல்வம் பரத நம்பிக்கே அருள் பவன்' என்று நல்லோர் அனைவராலும் போற்றப்படும் இயல்பினனாய இவன், 'ஒருவன், இரக்கம் அற்றவனாய் தனது சொந்த தம்பியின் மனைவியைத் தனக்கு உரிமையாக்கிக் கொண்டான்' என்ற சொல்லைக் கேட்டுப் பொறுத்திருக்கும் தன்மை உள்ளதாகுமா? பொறுக்காது.

'கொடுக்க வேண்டிய முறையினனாகிய அண்ணன், தம்பிக்கு, எதுவும் கொடுக்காததோடு, கொள்ளுதற்குரியதல்லாத, அவனுக்கே உரிமையுடைய மனைவியையும் பறித்துக் கொண்டான்' என்றால் இந்த முறையற்ற செயலைக் கேட்ட, இராமன் எப்படி பொறுத்துக்கொள்வான்?

'முறையை-நீதியை-தர்மத்தை நிலை நாட்ட வந்தவன் ஆகையால், இராமன் வாலியின் இவ்வற்பச் செயலைக் கேட்டுக் கொதித்

தெழுந்தான்' எனக் காரணம் காட்டப்படுகின்றது, காவிய நாயகனின் கோபத்திற்கு.

ஆகவே, வாலியின் மரணத்திற்கு, இராமன் கருத்தாவாக அமைவதற்கு, அவன் தன்மையும், தம்பியின் மனைவியைக் கவர்ந்த வாலியின் செயலும் நிமித்த காரணமாகிறது.

'தன்னால் இயலாமையும், வேறு வழி இல்லாமையும்' தான் சரணம் அடைபவனுக்குரிய தகுதிகள். அத்தகுதிக்குரியவனாகத்தான் இருந்தான் சுக்கிரீவன்.

சரணம் அடைபவனை, எத்தகைய கஷ்டம் வந்தாலும், அவனை ஏற்றுக் கொண்டு அவனுக்கு அருள் செய்வதுதான்,சரண்யம் அறம்.

> 'உடைந்தவர்க்கு உதவானாயின் உள்ளதுஒன்று
> ஈயானாயின் அருள்தான் என்?அறம்தான் என்?

என்பது இராமபிரானுடைய கொள்கை, அவன் இயல்பு, தன்மை.

ஆகவே, சுக்கிரீவன் சரணம், வாலி மரணத்திற்குத் துணைக் காரணம் ஆயிற்று.

தூய்மைத் தம்பியின் மேல் கொண்ட வாலியின் ஐயம் அவன் மரணத்திற்கு முதற்காரணத்தைப் பெற்றுக் கொண்டு விட்டது.

ஆகவே இந்த மூன்று காரணங்களின் தோற்றத்திற்கு வாலியின் செயலே அடிபடையாகிறது. தன் மரணத்திற்கு. வாலியே தன்னை அறியாமல் வழி வகுத்துக் கொண்டு விட்டான்.

அவ்வழியாகவே சென்று, காலதேவதை, இராமபிரான் தடக்கை வில்லாக அமைந்து, தன் காரியத்தை முடித்துக் கொண்டு விட்டது.

முதல்வன்:

பழமைக்குரிய வாலியின் அரசாட்சி கழிகிறது. புதுமை ஆட்சி, கிட்கிந்தைக்குள் புகவேண்டும்.

பழையன கழிந்து புதியன புகும் இக்காட்சியைக் காண யாவரும் ஆர்வம் உடையவர்களாய் இருப்பது இயல்பு.

கழிதலும் புகுதலும் ஆகிய இந்நிகழ்ச்சியின் காலப் போக்கிற்கு, எவன் துணையாக நின்றானோ அவன் தான் முதல்வன். காலக் கணிதம் எவனுடைய தோற்றத்தையும் மறைவையும் அடிப்படையாகக் கொண்டு வளர்ந்து செல்கின்றதோ, அவன் இங்கு முதல் இடத்தைப் பெற்றுக் கொள்கின்றான்,

அந்த சூரியன் தான், இந்தப் புதுமைக் காட்சியைக் காண முந்திக்கொண்டு முதல்வனாய் வருகின்றான்.

'புதல்வன் பொன் மகுடம் பொறுத்தலால்,
முதல்வன்பேர் உவகைக்கு முந்துவான்,
முந்தி வந்து அவன் செய்த செயல் என்ன?
'உதவும் பூமகள் சேர ஒண் மலர்க்
கதவம் செய்ய கரத்தின் நீக்கினான்'.

புதல்வன் [சுக்கிரீவன்] பொன் மகுடம் பொறுத்தலால் [முடி சூடிக் கொள்ளப் போவதால்] முதல்வன் [அவனுக்குத் தந்தையாகிய சூரியன்] பேர் உவகைக்கு முந்துவான் [மகிழ்ச்சிப் பெருக்கோடு முந்திக் கொண்டு வந்து] உதவும் பூமகள் சேர [செல்வம் தந்து உதவக் கூடிய இலட்சுமி, அவனிடம் வந்து சேர்வதற்கு] ஒண்மலர்க்கதவம் [அவள் தங்கியுள்ள ஒளிமயமான தாமரை மலரின் குவிதலை] செய்ய கரத்தின் நீக்கினான் [தனது செம்மையான ஒளியாகிய கைகளால் விரித்தான்]

புதல்வன் புத்தாட்சியைக் காணவும், அவனுக்கு ஆட்சிக்கு வேண்டியதை உதவவும் ஒரு தந்தை எவ்வளவு ஆவலுடையவனாய் இருப்பான். இந்த மனித இயல்பை, சூரியன் மேல் ஏற்றி, ஓர் அருமையான கற்பனை செய்துள்ளார் கம்பர்.

கதையைக் காப்பியமாக வடிப்பதற்குள்ள வகைகளுள், இதுவும் ஒன்று. இயற்கைப் பொருளையும் ஒரு கதாப்பாத்திரமாக்கி, இணைத்து விடுவது.

கதாப்பாத்திரமாக இணைப்பதற்கு வரும் கற்பனை அறிவுக்குப் பொருத்தமாக அமைய வேண்டும்.

## கற்பனை:

கவிஞனிடத்தில், இயல்பாக அமைந்து கிடக்கும் அறிவைக் கடந்த ஓர் அபூர்வ சக்தியின் கலப்பினால் வெளிவரும் கற்பனை தான், வளமுள்ளதாகி, கற்பார் உள்ளத்தைக் களிப்பிக்கும்.

எந்தக் கற்பனையும், மனித உள்ளத்தில் எழும் உணர்ச்சிகளை அடிப்படையாக்கிக் கொள்ளும் போதுதான், கவிதை காலம் கடந்து நிற்கிறது.

கற்பனையைத் தன்னுள் கரைத்துக் கொண்டு வெளிவரும், எந்தக் கவிதையும், மனித அன்பின் ஆழத்தையும், அறவாழ்வின் உண்மையையும் வெளிப்படுத்துவதாக அமையும்.

அப்படி அமைந்த கவிதை இது.

புதல்வன், முதல்வன், தாமரை மலர் இவைகள் காணப்படுவன.

முதல்வனாகிய சூரியன் தோற்றம் [சூரியோதயம்], தாமரை மலர்தல் இயற்கை நிகழ்ச்சி.

புதல்வனாகிய சுக்கிரீவனுக்கு முடிசூட்டு விழா நடப்பது, கிட்கிந் தையின் புதுமைக் காட்சி.

'சுக்கிரீவன் சூரியனுடைய மகன்' என்பது புராணம்; திருமகள்- இலக்குமி தாமரை மலரை இருப்பிடமாகக் கொண்டவள் என்பதும் புரா ணம். இவைகள் கதைக் கோப்புக்கு எடுத்துக் கொண்ட காப்பிய மரபு.

இவைகளை அடிப்படையாகக் கொண்டு, கம்பர் கற்பனைக் கோ யிலைக் கட்டினார். கவிதைத் தேவியை, அதனுள் வீற்றிருக்கச் செய்து உள்ளார்.

முடிசூட்டு விழா அன்று, உதயமாகும் சூரியன் ஓர் உயர்ந்த எண் ணத்திற்கு உரியவனாகின்றான். தன் புதல்வன் முடி சூடி, சிம்மாசனத் தில் வீற்றிருக்கும் காட்சி, தந்தைக்கு எவ்வளவு பெரிய மகிழ்ச்சிக்குரிய தாக இருக்கும்! இது மனித இயல்பு. இம்மானுட இயல்பு, சூரியன் தோற்றத்தில் பொருத்தப்படுகிறது.

சூரிய தோற்றத்தைக் கண்டால், தானாகவே மலரும் இயல்பி னது தாமரை, இரவில் குவிந்திருந்த தாமரைகதவால் மூடப்பட்ட இலக்குமியின் வீடாகக்கற்பிக்கப்படுகிறது.

'மூடப்பட்ட வீட்டில்' திருமகள் உள்ளே இருக்கிறாள் என்பதும், அத்திருமகள் தன் புதல்வனது முடிசூட்டு விழாவிற்கு வரவேண்டும்' என் பதும், முதல்வன் உள்ளத்துக் கற்பனை.

'அத்திருமகள், தன் புதல்வனது ஆட்சிக்குச் செல்வம் தந்து உதவ வேண்டும் என்பதற்காக, அவள் இருக்கும் மூடப்பட்ட வீட்டுக் கதவைத் திறந்து விடுகின்றான்' என்பது சூரியன் எண்ணக் கற்பனையாக வெளி வருகிறது.

செய்யவள், தன் புதல்வனுக்கு வந்து உதவுவதற்காக சூரியன் செய்ய கரத்தால் (கையால்) கதவைத் திறந்தான்.

ஒரு தந்தை, தன் அன்புக்குரிய மைந்தன், அரசாட்சிப் பொறுப்பை ஏற்கும் போது என்ன எண்ணுவானோ, என்ன செய்வானோ, அவ்வெண்ணமும், அச்செயலும், இயற்கையாக உதயமாகி வரும் சூரியன் மேல் ஏற்றப்பட்டிருக்கிறது.

இதனால், அமானுஷ்யனான ஒருவனும் (சூரியன்) கதாப்பாத்திரங்களுள் ஒருவனாகப் படைக்கப்பட்டுள்ளான்.

இத்தகைய நிகழ்ச்சியும், படைப்பும்தான் கதையைக் காப்பியமாக்குகிறது.

இக்கவிதை, மேலும் ஒரு கதைக்குரிய ஆழ்பொருளை உள்ளுறையாக்கிக் கொண்டுள்ளது.

கிட்கிந்தையில் நடக்கும் இந்த முடி சூட்டு விழா நிகழ்ச்சி, அசோகவனச் சிறையில் அடைபட்டுக் கிடக்கும் சீதை (பூமகள் சேர உதவும்) இராமபிரானுடன் வந்து சேர்வதற்கு உதவுவதாக அமையப் போகிறது என்னும் கருத்து, இக்கவிதையில் அடங்கியிருப்பதை, ஆழ்ந்து கற்பார் காணலாம்.

'கதையின் பின் நிகழ்ச்சி எப்படி அமையப் போகிறது' என்பதை, முன்னாலேயே, குறிப்பாக உணர்த்துவது, உயர்பெரும் கவிஞர் தம் இயல்பு.

சீதையின் சிறைக் கதவுத் திறப்பிற்கு, சுக்கிரீவன் முடிசூட்டு விழாப் புதுமைக் காட்சியே வழி வகுத்து விடும்' என்ற ஆறுதலை, கம்பர் இக்கவிதையின் மூலம் சொல்லாமல் சொல்லி, கவிச்சக்ரவர்த்தியாகிறார்.

கற்பார்தம் சிந்தனைக்கு, நல்விருந்தளிக்கும் பல கவிதைகளுள் இதுவும் ஒன்று.

ஸ்ரீ :

# அலங்கலா? அரவமா?

## இருள் :

அடே அப்பா! எவ்வளவு பெரிது! நீளத்தைச் சுருட்டிக் கொண்டு இப்படி வளைந்து கிடக்கிறதே! தலையைத் தூக்குகிறது: நாக்கை நீட்டு கிறது: வாலை ஆட்டுகிறது. சந்தேகமே இல்லை, பாம்புதான். உதவி! உதவி!

தெருவில் சென்ற ஒருவன், அச்சத்தினால், கவ்வப்பட்டு கதறிக் கதறிக் கூவினான்.

சென்ற நேரம் இரவுக் காலம்: இருட்டு: தெருவிளக்கு ஒன்று கூட எரியும் விளக்காக இல்லை.

விளக்கு உண்டு: ஒளி இல்லை. அதனால், இருட்டு தன் ஆட்சி யை முழுமையாக்கிக் கொண்டுவிட்டது அத்தெருவில்.

இருட்டின் ஆளுகை, உள்ள பொருளை உள்ளபடி காட்டுவ தில்லை. மாறாகக் காட்டி, அங்கு வருவார்க்கு அச்சத்தை ஏற்படுத்தும்.

இல்லாத ஒன்றை இருப்பதாகக் காண்பதற்கும், இருக்கின்ற ஒன்றை வேறொன்றாகக் காண்பதற்கும், துணையாக நிற்பது மங்கிய இருளின் இயல்பு.

மெய்யைப் பொய்யாக்கி, பொய்யை மெய்யாக்குவதால், இருட்டு, எல்லார்க்கும் அச்சத்தைக் கொடுக்கும் வேலையையே செய்கின்றது.

பொய் வினைக்குத்தான் இது உதவும்.

கை விளக்கு ஒன்று வந்தால், இருள், இருந்த இடம் தெரியாமல், தானே ஓடிப்போய் விடும். அகன்ற (விரிந்த) இருள் அகன்ற பிறகு, பொருள் தன் இருப்பினை உள்ளபடியே காட்டும்.

கூவிக் கூவி நெஞ்சுருகிக் கண்பனி சோர நின்றால், உதவிக்கு யாரேனும் ஒருவர் ஓடிவரத்தான் செய்வர்.

அச்சத்தினால், கூப்பிடும் சொல்லைக் கேட்டால், இரக்கம் கொண்டவர், இருந்த இடத்திலேயே இருப்பது என்பது இயலாததொன்று.

இரக்க இயல்பினன் ஒருவன் காதில், தெருவில் சென்றவன் கூவிய அச்சச் சொல் விழுந்தது.

விழுந்ததுதான் தாமதம். உடனே எழுந்தான். கூவிய குரல், உதவி, 'எந்த உருவில் வர வேண்டும்' என்று எதிர்பார்க்கிறது என்பதையும், நன்கு உணர்ந்து கொண்டான்,

## ஒளி :

தெருவில் சென்றவன், கூவிய நடுக்கக் குரல் ஒடுங்க அச்சம் அகல வேண்டும்.

எதிரிலே கிடப்பது பாம்பாகக் காணப்படுவதே அச்சத்திற்குக் காரணம்.

பாம்பு என்றால் படையும் நடுங்குமே? ஒரு ஆயுதமும் இல்லாத தனி மனிதன் நடுங்குவதற்குச் சொல்லவா வேண்டும்?.

கண்ணுக்குத் தெரிவது பாம்பாக இருந்தால், தெருவில் சென்றவனுக்கு உதவ, கோல் கொண்டு வர வேண்டும்.

கிடப்பது பாம்பு அல்ல என்றால், கோலின் உதவி, தேவையற்றது.

அதனால், அவனுடைய அச்சத்தை அகற்றுதற்குரிய முதல் உதவி, முன்னால், வளைந்து சுருண்டு கிடப்பது பாம்பா? அல்லது வேறு ஏதாவது ஒரு பொருளா? என்பதைக் கண்டுபிடிப்பதாகும்.

இருளால் மறைக்கப்பட்டிருக்கும் பொருளின் உண்மைத் தோற்றத்தைக் காண்பிப்பதற்கு, இருளை விரட்டியாக வேண்டும்.

இருளை ஓட ஓட விரட்டியடிப்பது அதற்கு எதிர்மறையான ஒன்று என்பதை நன்கு புரிந்து கொண்டவன், கை விளக்கு (டார்ச்சு லைட்) ஒன்றை, உதவும் பொருளாக எடுத்து வந்தான்.

வந்த ஒளி, கிடந்த பொருளின் மேல் பாய்ந்தது. பாம்பின் தோற்றமும் மறைந்தது. பொருளின் உண்மை வடிவமும் புலனாயிற்று. தெருவில் சென்றவன் அச்சமும் அகன்றது.

ஒளியின் உதவி, சிறிதுதான்; இடத்தாலும், காலத்தாலும், பொருளாலும் பெரியதல்ல! இருப்பினும், அது தக்க காலத்தில் செய்யப்பட்ட உதவியாகையால், அது 'ஞாலத்தின் மாணப் பெரிது' என்று வள்ளுவம், அவ்வுதவியை மிகப் பெருமையாகப் பேசும்.

அந்த ஒளியின் உதவி கிடைக்காது போயிருந்தால், எதிரில் தோன்றுவது 'பாம்பு என்ற அச்சத்தினால் இறந்தே போயிருப்பான்.

அவனை இறப்பினின்றும் விடுவித்து, உலகில் இருக்கச் செய்தது அந்த ஒளிதான்.

உதவ வந்தவன், கோல் கொண்டு வந்திருந்தால், அவனும், இவனைப் போன்று அஞ்சியவனாகத்தான் ஆவான்.

ஒளியோடு வந்ததால்தான், வெளியில் கிடப்பது இன்னது என்று தெரிந்து கொள்ள முடிந்தது. அச்சத்தை அகற்ற முடிந்தது.

ஒளி தந்து உதவியவனை, தெருவில் நடுங்கிக் கொண்டு சென்றவன், என்றும் மறக்காமல், அவனுக்கு நன்றி செலுத்திக் கொண்டே இருக்க வேண்டும்.

'யாருடைய உதவியால் வாழ்ந்தோம்: வாழ்கின்றோம்' என்பதை, மனிதன் வெகு விரைவில் மறந்து விடுகின்றான். மறப்பது மட்டும் அல்ல! உதவியவனை எதிர்க்கவும் கூடத் தயாராகி விடுகின்றான்.

ஒளிதந்த உதவியா அது? உயிர் தந்த உதவியாக அல்லவா, மதித்துப் போற்ற வேண்டும்.

பாம்பு என்ற அச்சத்தால், 'ஆவி, யாக்கை அகத்ததோ புறத்ததோ' என்று தடுமாறிக் கொண்டிருந்த நிலை, கைவிளக்குக் காட்டிய ஒளியால்தானே, தக்கதோர் நிலை அடைந்தது.

அதனால் அவ்வுதவியை உயிர்தந் உதவியாகவே மதித்தால்தான் மனிதன், மேலும் ஆபத்தான காலத்தில் தக்கதோர் உதவியைப் பெறுவான்.

## அலங்கல் :

ஒளிபட்டதும், பொய்ம்மைத் தோற்றம் மாய்ந்தது. உண்மைப் பொருள் தன்னைக் காட்டியது.

'அலங்கலில் தோன்றும் பொய்ம்மை அரவு' அகன்றது. (அலங்கல் -மாலை பூமாலை) அரவு-பாம்பு]

தெருவில் கிடந்தது, மலர் மாலைதான். அதுதான் அரவாக [பாம்பாக) த் தோன்றியது. இந்தப் பொய்ம்மைத் தோற்றத்திற்குக் காரணம். அங்கு சூழ்ந்திருந்த இருள். இருந்த இருள் வந்த ஒளியால் மாய்ந்தது, உண்மை தெளிவாயிற்று.

மலர்மாலை எல்லோரும் நடந்து செல்கின்ற தெருவில் கிடக்குமா?

மங்கையர் மார்பிலும், மைந்தர்கள் தோளிலும் புரண்டு புரண்டு மணங் கமழ்வித்துக் கொண்டிருக்க வேண்டிய மலர் மாலை, நடப்பார் தம் கால் மிதிபடும் தெருவில் கிடக்கக் காரணம் என்ன?

சூழ்நிலை, எந்தப் பொருளையும் எந்த இடத்திலும் கிடத்தி வைத்து விடும்.

இந்த அலங்கலுக்கு, தெருவில் கிடக்க வேண்டிய சூழ்நிலை என்ன வந்தது?

மாலை [அலங்கல்] தானாக, தெருப்பக்கம் வரவில்லை. அது யாரை அழகு செய்து கொண்டிருந்ததோ, அவரால் தான், தெருப்பக்கம் தள்ளப்பட்டது.

காதலர்களைக் கலவியால் களிப்பித்துக் கொண்டிருந்த மலர் மாலை, புலவியால், தெருப்பக்கம் வீசி எறியப்பட்டது.

காதலர்களது கலவியைத் தொடர்வது புலவி (ஊடல்) தானே! புலவி (ஊடுதல்) கலவியின் இன்பத்திற்கு [காமத்திற்கு இன்பம்] உதவுவதற்குத்தான் தொடர்கிறது.

ஆனால், காதலர்கள் அதனை அந்த சமயத்தில் உணராததால், கோபத்தினால் [சிறு கோபம்] ஏதேதோ பேசுவது மட்டும் அல்ல! செய்யத் தகாததைச் செய்யவும் துணிந்து விடுகின்றனர்.

இதுவரை! தம் கண்ணுக்கு அழகுப் பொருளாய்க் காட்சி தந்தும், மூக்குக்கு நறுமணத்தை நல்கியும், மேனிக்கு மென்மை ஈந்தும், கலவிக் காலத்தை இன்ப உலகாக்கிய மலர்மாலையை எவ்வளவு பாராட்ட வேண்டும் இந்தக் காதலர்கள்.

அதற்கு மாறாக, தம் கோபத்தால், அதனைக் கசக்கு கசக்கு என்று கசக்கி வெளியில் தூக்கி எறிந்தால் அது செய்யத் தக்க காரியமா?

அவர்களது காதலின் மென்மைக்கு (மலரினும் மெல்லிது காமம்) நான்தான் எடுத்துக்காட்டாக அமைவேன். அப்படியிருக்க என்மேல் கோபத்தைக் காட்டலாமா?

மலர் மாலையின் எண்ணம்.

எங்கோ போக வேண்டிய கோபம், இங்கு [என்மேல்] வந்ததால் கசக்கப்பட்டு விட்டேன். வீசி எறியவும் பட்டேன்.

காதலர்களது நன்றியின்மையைக் கருத்தில் கொண்டு, வீசப்பட்ட இடத்தில் செயலற்றுக் கிடந்தது மாலை.

தண்டுதல் இன்றி ஒன்றி,
  தலைத்தலை சிறந்த காதல்
உண்டபின், கலவிப் போரின்
  ஓசிந்தமென் மகளிரேபோல்,
பண்தரு கிளவி யார்தம்
  புலயிவில் பரிந்த கோதை,
வண்டொடு கிடந்து, தேன்சோர்
  மணிநெடுந் தெருவில் சென்றார். -
[கம்-1486]

(தண்டுதல்-நீங்குதல்: ஒசிந்த-துவண்ட: பண்தரு கிளவியார்-இன் சொற்களைப் பேசும் மகளிர்-கோதை-மாலை)

கலவிப் போரின் ஒசிந்தமென் மகளிரைப் போல, மாலை தெருவில் கிடந்தது.

எந்த மாலை இங்கு உவமேயமாக்கப்பட்டதோ, அந்த மாலை, தக்க இடத்தில் உவமைக்குரியதாக்கப்படும். அதெல்லாம் கவிச் சக்ர வர்த்தியின் கைவண்ணம்.

அரவு:

கசக்கப்பட்ட மலர்கள், காய்ந்து சருகாகிய நிலைமையை எய்தி விட்டன. காற்று வீச வீச சருகாகிய மலர்கள் ஆடத் தொடங்குகின்றன. முன்னும் பின்னுமாக மாலையில் இருந்த மலர்களின் அசைவு, பாம்பின் நாக்கு நீள்வையும், வால் ஆட்டத்தையும் காட்டுகின்றது.

மாலை வெகு நீளமானது. மேல் மாடத்திலிருந்து, கோபத்தினால் எறியப்பட்டதாகையால், வளைந்து சுருண்டு விழுந்துள்ளது.

இந்தத் தோற்றம், அங்கு இல்லாத ஒரு பொய்ம்மைத் தோற்றமாகிய பாம்பைக் காட்டிக் கொண்டுள்ளது.

நீளமும், வளைவும், அசைவும் பாம்புக்குரியது. அது அப்படியே இங்கு இருப்பதால், காண்பாருக்கு, பாம்பாகவே, தோற்றி அச்சத்தை விளைவித்துவிட்டது.

மாலை காணப்படு பொருள்; காட்சி மாற்றத்தால், மாலை (அலங்கல்) பாம்பாக [அரவாக] மாறியது.

காண்பவன் ஒருவன்தான்; காணப்படு பொருளும் ஒன்றுதான்.

ஆனால், இருளின் செறிவு, காட்சிக்குத் துணையாக நில்லாததால் காட்சி மாறியது.

மென்மையான மாலை வன்மையான பாம்பாகத் தோற்றம் அளித்து, காண்பானுக்கு அச்சத்தை விளைவித்து விட்டது.

பாம்பு மறைந்தால், அச்சமும் மறையும்.

பாம்பும் மறைந்தது; அச்சமும் மறைந்தது.

எப்பொழுது?

ஒளி வந்தது. வந்த ஒளி, காண்பானுக்கு நற்காட்சி வழங்கிய தால், காணப்படு பொருள் மாலையாகவே தோன்றியது.

'அங்கு தோன்றுவது அலங்கலா? அரவமா?' என்றால், இருள் இருந்தவரை அரவுதான். ஒளி வந்து இருள் நீங்கிய பிறகு அலங்கல்.

இருட்டு இருந்த வரை, அரவின் தோற்றத்தை, விலக்க முடிய வில்லை. ஒளி வரும்வரை, மாலை அரவுதான்.

**உவமை :**

'அலங்கலில் தோன்றும் பொய்ம்மை அரவு'

என்ற, உலகில் காணப்படும் ஒரு நிகழ்ச்சியை, உவமையாக்கிக் கொண்டு, கம்பர் ஒரு சமயப் பேருண்மையை விளக்குகின்றார்.

இல்லை! இல்லை!!

நம் பாரத நாட்டு, ஆழ்ந்த தத்துவக் கருத்தை, எளிதாக்குவதற்கு, இந்த உவமையை எடுத்துக் கொண்டார் என்று சொல்லலாம்,

நம் நாட்டுச் சமய ஞானிகள் வழங்கிச் சென்றுள்ள தத்துவங்கள், நிறைபொருளை மறைவாக அடக்கிக் கொண்டுள்ளன.

மறைவை விலக்கினால், நிறை பொருளை நேருக்கு நேராக சந்திக்கலாம்.

திருக்கோயில்களில் திரையிடப்பட்டிருப்பதும், கற்பூர ஆரத்தி (ஒளி) காட்டப்படும் போது, திரை விலக்கப்படுவதும், உடனே, ஆண்டவனை தரிசித்து ஆனந்தம் பெறுவதும், இந்தத் தத்துவத்தை அடிப்படையாகக் கொண்டுதான் அமைக்கப்பட்டிருக்க வேண்டும்.

## தத்துவம் :

எனது ஆவி யார்? யான் ஆர்? இந்த இரண்டையும் இணைக்கும் சக்தி எது? இணைந்த இரண்டும் ஒன்று சேர்ந்து வாழும் இடம் எது? இடத்திற்கும் அதில் இருப்பவனுக்கும் உள்ள தொடர்பு யாது?

இதற்கு விளக்கம் கொடுப்பதே தத்துவம்.

சமயத் தத்துவக் கருத்துக்களின் முதல் பிறப்பிடம் வேதம்தான் என்பதை, சமயப் பேரறிஞர்கள் அனைவரும் ஒத்துக் கொள்வர். வேதம் கடல் போன்று ஆழமானது; அகன்றது.

வேதக் கடலுள் புகுந்த சமய ஞானிகள், அவரவர் மூச்சடக்கி மூழ்கும் ஆற்றலுக்கு ஏற்ப, தமக்குக் கிடைத்த முத்துக்களைக் கொண்டு வந்து உதவியுள்ளார்கள்.

முத்துக்கள் அனைத்தும் ஒன்று போல இல்லை. அதன் பிறப்பு ஒரே இடம்தான்: (வேதக்) கடல்.

ஆனால், வெளித்தோற்றம், வேறுபாடு உடையதாக இருக்கிறது. வேறுபாடு விக்கம் [மிகுதி] உள்ளதாகக் காணப்படுகிறது.

அம்ம! அம்ம! எவ்வளவு வேறுபாடு.

காண்பார் முதலில் தத்துவ முத்துக்களின் மிகுதியான வேறு பாட்டைத்தான் பார்ப்பார்கள்.

## வேறுபாடு:

### அத்வைதம்:

உள்ளதெல்லாம் ஒன்றேதான். ஒரே பொருள்தான், காண்பார்க் குப் பல வடிவங்களாகத் தோன்றுகின்றது.

காணப்படு பொருளின் பன்மைத் தோற்றத்திற்குக் காரணம், காண்பவரின் கண் [காட்சி அறிவு] கோளாறுதான். அறிவு ஒழுங்குபட் டால், காணப்படு பொருள் ஒன்று பட்டுவிடும்.

வெளிப்பொருள் ஒன்றுபடுவது மட்டும் அல்ல! காண்பவரையும் அதனுள் அணைத்துவிடும்.

இதனைச் செய்யும் போதுதான் அறிவு மெய்யறிவாகிறது.

மெய்யறிவு, காண்பானையும் காணப்படு பொருளையும் இரண்ட ற்றதாக்கி, ஒன்றாக்கி வைக்கிறது.

ஒன்றுக்கு அப்பாற்பட்டு எதுவும் இல்லை என்று வற்புறுத்திக் கூறுவது அத்வைத தத்துவம்.

அ -|- துவைதம். இரண்டு அற்றது. துவைதம்-இரண்டு: அ-எதிர் மறையைக் குறிப்பது. இரண்டு இல்லாதது: ஒன்று.

உள்ள ஒன்றை பன்மையாகக் காட்டுவது, உன்னுள் புகுந்த மாயை. மாயை நீங்கினால் ஒன்றாகி விடலாம்.

இது ஒரு தத்துவ முத்து; 'அத்வைதம்' என்ற திருப்பெயரால் ஒளி விட்டுக் கொண்டிருக்கின்றது. எதனையும் பிரம்மமாகக் காண்பது.

ஆதிசங்கரர், எடுத்துக் கொடுத்த, அருமையான தத்துவமுத்து அத்வைதம். பிரம்மம் ஒன்றே நிலையானது. இது அத்வைத வேதாந்தம் எனப்படும்.

## விசிட்டாத்வைதம்:

கண்ணுக்குத் தெரியாத உயிர் செயல்பட வேண்டுமானால், ஓர் உடலைத் தங்கும் இடமாக்கிக் கொள்ளவேண்டும். உயிர் உடலோடு இணைந்தால்தான் செயல் நடைபெறும்.

உலகம் செயல்திறன் கொண்டது. செயல்நடத்த உயிரும் வேண்டும்: உடலும் வேண்டும். இந்த இரண்டும் இணைந்து செயல் செய்வதற்கு ஓர் இடமும் வேண்டும். அந்த இடம்தான் உலகம்.

தாங்கி இருக்கும் உடல் மறையலாம்! தங்கியிருக்கும் உயிர் மறையாது. அது மன்னுயிர். [மன்-நிலைபெற்ற]

ஆகவே, உயிர், உலகம் இரண்டும் உள்ள பொருளாகின்றன. அது மட்டும் அல்ல! உலகத்தில் இந்த உயிரைச் செயல்படுத்துவதற்கும் ஒரு சக்தி இருக்க வேண்டும். அதுதான் இறைவன்.

உலகம், உயிர், இறைவன் மூன்றும் என்றும் உள்ளனவே. மூன்று கவடாய் முளைத்தெழுந்ததாகக் காண்பதே விசிட்டாத்வைதத் தத்துவத்தின் மூலம்.

விசேஷ அத்வைதம். 'வி' சிறப்பைக் குறிப்பது.

துவைதத்தோடு, எதிர்மறைக்குரிய 'அ' வை அகற்றி, விசேஷத்திற்குரிய (சிறப்பிற்குரிய) 'வி' யைச் சேர்த்துக் கொண்டார் இராமானுஜர்.

'எதிர்மறை எதற்கு? விசேஷமே [சிறப்பு] இருக்கட்டும். அதுதான் நமக்குச் சிறப்பு' என எண்ணினார் போலும் எம்பெருமானார் இராமானுஜர்!

உயிர் எப்படி உடலைத் தங்கும் இடமாக்கிக்கொண்டு செயலாற்று கின்றதோ, அப்படித்தான் இறைவன், உயிரையும் உலகத்தையும் தங்கும் இடமாக்கிக் கொண்டான்; செயலாற்றுகின்றான்.

திட விசும்பு, எரி, வளி, நீர்நிலம் இவை மிசை
படர்பொருள் முழுவதும் ஆயவை அவைதொறும்,
உடல்மிசை உயிர்என, கரந்துஎங்கும் பரந்துளன்,
சுடர்மிகு அருதியுள் இவை உண்ட சுரனே.

(திருவாய்மொழி 1.1.7)

அவன்தான் இறைவன். 'இறை' என்ற சொல்லுக்கு 'தங்குதல்' என்று பொருள்.

உடலில், உயிர் எல்லா உறுப்புகளிலும் நிறைந்து இருக்கிறது. அதே சமயத்தில் மறைந்தும் இருக்கிறது. நிறைந்திருப்பது எதுவோ, அது மறைந்துதான் இருக்கும்.

அதேபோன்று தான், இறைவன் உலகு எங்கும் கரந்தும் [மறைந் தும்] பரந்தும் (விரிந்தும்-நிறைந்தும்) கிடக்கின்றான்.

தங்கும் இடமாக எது இருக்கிறதோ, அது, அங்கு தங்கியுள்ள ஒன்றினால், தாங்கப்படுவதாகவும் இருத்தல் வேண்டும்.

உயிர் உடலில் தங்கியுள்ளது. உடலைத் தாங்கியும் உள்ளது.

தங்கும் வேலையை உயிர் நிறுத்திக் கொண்டால், உடல் தானா கவே விழுந்துவிடும். அதனால், உடலைத் தாங்குவதும் உயிர் தான் என் பதை உணரலாம்.

அதேபோன்றுதான், இறைவன் உலகைத் தங்கும் இடமாகவும், தாங்கும் பொருளாகவும் அமைத்துக் கொண்டுள்ளான்.

பொருள் ஒன்றுதான். ஆனால், தங்குதலையும், தாங்குதலையும் செய்கிறது.

தங்கி இருப்பது தெரிகிறது. தாங்கிக் கொண்டிருப்பது தெரியவில்லை.

நிறைந்திருப்பது புரிகிறது. மறைந்திருப்பது புரியவில்லை. புரிந்த, தெரிந்த ஒன்றை மட்டும் வைத்துக் கொண்டு பொருள் ஒன்றே [அத்வைதம்] என்று வாதிப்பதை விட, அதன் நிலையையும் தன்மையையும் ஒத்துக் கொண்டு விசேஷித்த அத்வைதமாகக் [விசிட்டாத்வைதம்] கொள்ளலாம் என்பது இராமானுஜர் கொள்கை.

இது வைணவ விசிட்டாத்வைத சித்தாந்தம் எனப்படும்.

மனிதன் சமய வாழ்க்கையில் பின்பற்ற வேண்டியது வேதாந்தமா? சித்தாந்தமா?

## வேதாந்த விளக்கம் :

பிரபஞ்சமும் (உலகம்) பிரம்மமும் ஒன்றேதான். வெவ்வேறானவையல்ல.

வேறானதாகத் தோற்றுகிறதே என்றால், அங்கு மாயை வந்து முன் நிற்கும். மாயை, ஒன்றை இரண்டாக்கிக் காட்டுகிறது.

இந்த மாயா வாதம்தான், அத்வைதம் எனப்ப்டும் வேதாந்தம்.

கிடந்த கயிற்றைப் பாம்பாகக் காணச் செய்தது மாயை. மாயாவாதிகளால் காட்டப்பட்ட இந்தப் பழைய உவமையைத் தள்ளிவிட்டு,

கம்பர் மாலையைப் பாம்பாக்கினார். (அலங்கலில் தோன்றும் பொய்ம்மை அரவு)

'வன்மையான கயிறு எதற்கு? மென்மையான மாலையை வைத்துக் கொள்வோமே' என்று கம்பர் எண்ணினார் போலும்!

இருப்பது மாலை: இல்லாதது பாம்பு. இல்லாததை இருப்பதாகக் காட்டியது இருப்பதாகக் காட்டியது இருள். ஒளி வந்து இருள் நீங்கியதும் மாலை வெளிப்பட்டு விட்டது. பாம்பு மறைந்தது.

பிரபஞ்சமாகக் காணப்படுவது பிரம்மம்தான். பிரம்மம் தெரிய வில்லை. பிரபஞ்சம் தெரிகிறது. இந்த வேலையைச் செய்வது மாயை.

மாயை, இருளின் வேலையை மேற்கொண்டுள்ளது. ஞான ஒளி வந்தால், மாயை மறையும்; பிரபஞ்சம் பிரம்மமாகவே தோற்றும்.

'மரத்தை மறைந்தது மாமதயானை: மரத்தில் மறைந்தது மாமத யானை' மரத்தால் செய்யப்பட்ட யானை உருவம். யானையாகிய தோற் றம், இது மரத்தால் தான் ஆனது என்ற எண்ணத்தை மறைத்துவிடுகிறது. மரம்தான், இந்த யானை உருவத்திற்கு மூலப் பொருள் என்ற உணர்வு ஏற்பட்டுவிட்டால், யானை உரு மறைந்து விடுகிறது. மரமும் யானையும் வெவ்வேறானவையல்ல!

பிரம்மத்தால் ஆனதுதான் இந்தப் பிரபஞ்சம் (உலகம்). பிரபஞ் சமாகக் காணும் போது, பிரம்மம் என்ற எண்ணமே இல்லை. ஞானி களால் உணர்த்தப் பட்டு. பிரம்மத்தை உணர்ந்து விட்டால், பிரபஞ்சம் என்ற எண்ணம், தானே விலகிக் கொள்கிறது.

இதுதான், வேதாந்திகள் தரும் உவம உவமேய விளக்கம்.

பிரம்மத்தில் தோன்றும் பொய்ம்மைப் பிரபஞ்சத்தை விளக்கு வதற்கு, கம்பர் கையாண்ட உவமை-

'அலங்கலில் தோன்றும் பொய்ம்மை அரவு'

என்பது.

**உவமைப் பொருத்தம்:**

பிரம்மத்திற்கு மாலை உவமை: பிரபஞ்சத்திற்கு பாம்பு உவமை: மாயைக்கு இருள் உவமை: ஞானத்திற்கு (இறை உணர்வுக்கு) வெளிச்சம் உவமை.

'அலங்கலில் தோன்றும் பொய்ம்மை
அரவு, என, பூதம் ஐந்தும்
விலங்கிய விகாரப் பாட்டின்
வேறுபாடு உற்ற வீக்கம்'

பஞ்ச பூதங்களின் சேர்க்கையே உலகம். ஐம்பெரும் இயற்கைப் பொருள்களும் ஒன்றாகச் சேர்ந்து இயங்குவதுதான் உலகத் தோற்றம்.

''நிலம், தீ, நீர், வளி, விசும்போடு ஐந்தும்
கலந்த மயக்கம் உலகம்''

என்பது தொல்காப்பியம்.

நிலத்தில் திண்மையாக இருப்பதும், தீயில் ஒளியாக இருப்பதும், நீரில் தன்மையாக இருப்பதும், வளியில் [காற்று] இயக்கமாக இருப்பதும், விசும்பில் பரந்துபட்டு இருப்பதும் ஒரே சக்திதான்.

இந்த ஒரே சக்திதான், ஐம்பெரும் பூதங்களையும் இயக்கிக் கொண்டிருக்கிறது.

ஆனால் பார்ப்பதற்கு ஒன்றிலிருந்து ஒன்று விலகியிருப்பதாகவே தோற்றுகிறது.

நீரும் நெருப்பும் எவ்வளவு விலகியிருக்கிறது? நீரின் தண்மைக்கும் நெருப்பின் வெம்மைக்கும் உள்ள வேறுபாட்டின் மிகுதி [வீக்கம்] நமக்கு நன்கு தெரிகிறது.

மண்ணுக்கும் விண்ணுக்கும் எவ்வளவு வேறுபாடு! ஒன்று கீழே திண்மையாகக் கிடக்கிறது. மற்றொன்று மேலே பரந்தவெளியாக விளங்குகிறது.

வளி (காற்று) எங்கும் இயங்கிக் கொண்டே இருக்கின்றது ஒரு இடத்தில் நிற்காமல்.

இப்படி ஐம்பெரும் பூதங்களும் ஒன்றற்கு ஒன்று விலகிய காரியத்தால் (செயலால்) வேறுபாடு மிகுதியாகவே காணப்படுகிறது.

ஒரே மின்சார சக்தி, மின்சாரக் குமிழியில் [பல்பில்] வெளிச்சமாக ஒளி தருகின்றது. விசிறியில் [பேஃன்] சுற்றுகிறது. அடுப்பில் [மின்சார அடுப்பில்] வெப்பத்தைத் தருகிறது. அதே சக்திதான் மின்சார ரயில் வண்டியை இழுத்துச் செல்கிறது.

பொருள்களும் வெவ்வேறானவை: பெயர்களும் வேறுபட்டவை. செயல்களும் வேறுபட்டவைதான்.

வேறுபாட்டின் மிகுதி நன்கு தெரிகிறது.

ஆனால் ஒரு சக்திதான், இத்தனை வேஷத்தைப் போட்டுக் கொண்டு, போட்ட வேஷத்திற்கேற்ப ஆடிக்கொண்டிருக்கிறது என்பதை உணரும் வரை, வேறுபாடு உற்ற விக்கம் விலகாது.

## உவமேயம்:

இந்தக் கவிதையிலும், உவமேயம் நன்கு வீக்கம் பெற்றுக்

கொண்டு விட்டது. [வீக்கம்-மிகுதி]

'பாம்பு' என்ற ஒரு சொல்தான் உவமைப்பொருள். உவமேயமோ எவ்வளவு வீக்கம் பெறுகிறது.

'பூதம் ஐந்தின் விலங்கிய விகாரப்பாட்டின் வேறுபாடு உற்ற வீக்கம்'

இது உவமேயப் பொருள்.

'பாம்பு' சொல் சிறிது: பொருள் பெரிது. தன் நீளத்தை சுருட்டி வளைத்துக் கொண்டு கிடப்பது போல.

இந்த உவமேயப் பொருளும், ஒன்பது சொற்களாக நீண்டு, இரண்டு அடிகளில் வளைந்து கிடக்கிறது.

ஐம்பெரும் பூதங்களும் ஒன்றிலிருந்து ஒன்று விலகியே (பெயராலும் பொருளாலும் நீங்கிய) காரியம் செய்வதால் வேறுபாடு மிகுதியாகி விட்டது.

[விலங்கிய-நீங்கிய-விலகிய: விகாரப்பாடு - காரியப்பாடு - செயல் திறன். வேறுபாடு-வேற்றுமை: வீக்கம்-மிகுதி]

ஐம்பெரும் பூதங்களின் புறத்தோற்ற வேறுபாட்டுக் காட்சிக்கு உவமையாக வந்தது பாம்பு [அரவு].

உவமையில் அலங்கல் வெளிப்படையாக உள்ளது. எதனை விளக்க வந்ததோ அந்த உவமேயம் மறைந்து கிடக்கிறது கவிதையில்.

பஞ்ச பூதங்களில் சக்தி, தன்னை அடக்கிக் கொண்டு வெளிக் காட்டாது இருப்பது போலவே, உவமேயச் சொற்றொடரிலும், 'சக்தி' என்ற சொல்லை உள்ளடக்கி வைத்தார் போலும் கவிஞர் பெருமான்!

உவமையில், உள்ளது மாலை; இல்லாதது பாம்பு. மாலை மெய்ம்மை!, (அலங்கல்) பாம்பு பொய்ம்மை (அரவு).

உவமேயத்தில், காணப்படுவது பிரபஞ்சம்-பூதம் ஐந்தின் விலகிய விகாரப் பாட்டின் வேறுபாடுற்ற விக்கம்-வேறுபாட்டின் மிகுதி: காணப் படாதது பஞ்ச பூதங்களை இயக்கிக் கொண்டிருக்கும் சக்தி.

உள்ள மாலை, தோற்றப்படாத சக்திக்கு உவமை: இல்லாத பாம்பு, காணப்படும் பிரபஞ்சத் தோற்றத்திற்கு உவமை.

இல்லாத பாம்பை விரட்டவும், உள்ள மாலையைக் காட்டவும் ஒளி வேண்டும்.

காணப்படும் பிரபஞ்சம் மறைய வேண்டும். தோற்றப்படாத பிரம் மம் தோன்ற வேண்டும்.

காண்பது மறைவதும், காணப்படாதது தோன்றுவதும் எப் பொழுது நிகழும்?

## கற்பனை:

உள்ள ஒரு பொருள், வேறொன்றாகக் கற்பிக்கப்படும் போது, அது கலையாகி விடுகிறது.

கலை உரைத்த கற்பனையே, காண்பார் உள்ளத்தில் நிலையா கத் தங்கிக் கொள்கிறது.

கற்பனை கலைந்தால், உண்மை நிலைக்கும்.

கண்மூடி வழக்கம், கற்பனையைக் கலைய விடுவதில்லை.

கற்பனை, உள்ளதை உள்ளபடி காண முடியாதபடி கண்ணை மூட வைத்து விடுகிறது.

'கலை' என்ற பெயரால், காண்பார் கண்ணை, உள்ளதைக் காண முடியாதபடி, மூடச் செய்தலை வழக்கமாக்கி வைத்து விட்டது கற்பனை.

கற்பனை, உலக வழக்கத்தில் அவ்வளவு வலிமை பெற்றுக் கொண்டு விட்டது.

வழக்கத்திற்கு அடிமைப்பட்ட மனித மனம், கற்பனையைக் கலைக்க விரும்புவதில்லை.

கற்பனையால் கிடைக்கும் கலை இன்பத்திலேயே தன்னை மூழ்க வைத்துக் கொண்டுள்ள மனித மனம், கண்மூடி வழக்கத்திலிருந்து விடுபட்டால், உண்மை காணும் விருப்பம் தலை தூக்கும்.

உண்மை (மெய்ம்மை) காணத்துடிக்கும் மனி இதய விருப்பத்தை, மேலோங்காதபடி தடுத்துக் கொண்டிருப்பது கண்மூடி வழக்கமே.

இம்மூட வழக்கத்திற்குத் துணையாக நிற்பது கலை. கலைக்கு வலிமை சேர்ப்பது கற்பனை.

கற்பனை கலைவதற்கு, கண்மூடி வழக்கத்தின் வலிமை குறைய வேண்டும்.

மனித இதயம், கண்மூடி வழக்கத்தைப் பழக்கமாக்கிக் கொள்வதற்கு முன்பு முயன்றால், அதன் வலிமையைக் குறைக்கலாம்.

மூட வழக்கத்தின் வலிமை குறைய கற்பனை கலையும். கற்பனை கலைந்தால் உண்மை (மெய்ம்மை) விளங்கும்.

இதற்கு உதவுவது மெய்யறிவு.

மெய்யறிவு தோன்றினால், உண்மை உள்ளபடி புலனாகும்.

அப்போது, புறக்கண்ணுக்குத் தோன்றும் கற்பனை கலைந்து இதுவரை காணப்படாதது தோற்றம் அளிக்கும்.

## மெய்யறிவு :

> "எப்பொருள் எத்தன்மைத் தாயினும். அப்பொருள் மெய்ப்பொருள் காண்பது அறிவு".

என்பது, வள்ளுவம் மெய்யறிவுக்குக் கொடுத்த இலக்கணம்.

"யாதொரு பொருள் யாதோர் இயல்பிற்றாய்த் தோன்றினும், அத்தோன்றிய ஆற்றைக் கண்டொழியாது. அப்பொருளின் கண்நின்று, மெய்யாகிய பொருளைக் காண்பதே மெய்யுணர்வாவது.

பொருள் தோறும், உலகத்தார் கற்பித்துக் கொண்டு வழங்குகின்ற கற்பனைகளைக் கழித்து, நின்ற உண்மையைக் காண்பது என்றவாறா யிற்று!! என்பது பரிமேலழகர் தந்த, மெய்யறிவு விளக்கம்.

பொருள்களின் புறத்தோற்றத்தைக் காண உதவுவது அறிவு.

பொருள்களின் அகத் தோற்றத்தைக் காண உதவுவது மெய்யறிவு, அதுவே மெய்யுணர்வெனப்படும்.

புறத்தோற்றம் பொய்ம்மை : அகத்தோற்றம் மெய்ம்மை.

பிரபஞ்சம் பொய்ம்மைத் தோற்றம். பிரபஞ்சத்துள் அடங்கி நின்று, அதனைத் தன்னுள் அடக்கிக் கொண்டுள்ள பிரம்மம் அகத் தோற்றம்.

பிரபஞ்சம் (உலகம்) உலகத்தார் கற்பித்துக் கொண்டுள்ள கற்பனை. இந்தக் கற்பனையைக் கழித்தால், (உலகம்) பிரபஞ்சத்தின் உண்மைத் தோற்றம் உள்ளபடி விளங்கும்.

உண்மைத் தோற்றத்திற்கு மூல காரணமாயுள்ள மெய்யுணர்வு மனித மனத்தில் உதிக்கும் வரை, பிரபஞ்சம், பிரபஞ்ச (உலகம்) மாகத் தான் தோற்றம் அளிக்கும்.

காண்பது 'பிரபஞ்சமா? பிரம்மமா?' என்ற ஐயம், உள்ளத்தைக் கலக்கிக் கொண்டிருக்கும் வரை, தெளிவு ஏற்படாது.

பொய்ம்மைக் கலக்கம் அகன்றால், உண்மைத் தெளிவு ஏற்படும்.

பொய்ம்மை கலங்குவது-அஞ்சுவது, எப்போது?

மெய்யுணர்வு காணும் அப்போது.

மெய்யுணர்வுக்கு உணவாய், பிரபஞ்சத்திற்கு மூலச் சக்தியாய் அமைந்துள்ள அந்தப் பிரம்மம் (பரம்பொருள்)தான், இப்போது, கையில் வில்லேந்திக் கொண்டு, மண்ணுலகத்திற்கு வந்துள்ளது.

எவர் : அவர் :

" கலங்குவது எவரைக் கண்டால்,
அவரன்றே, கைவில் ஏந்தி,
இலங்கையில் பொருதார் என்பர்
மறைகளுக்கு இறுதி யாவார்".

எவரைக் கண்டால், பிரபஞ்சப் பொய்ம்மைத் தோற்றம் கலங்குமோ (அஞ்சுமோ) அவர்தான், இப்போது, எல்லோரும் காணுமாறு இந்தப் பிரபஞ்சத்திற்கு (மண்ணுலகம்) வந்துள்ளார்.

மேல் ஒரு பொருளும் இல்லா மெய்ப்பொருள், கால்தரை தோய, நின்று, அனைவரது கண்களுக்கும் புலனாவதற்கு, கையிலே வில் ஒன்று ஏந்திக் கொண்டு வந்துள்ளது.

வில்லேந்திய கையினராய இவரது காட்சி, பிரபஞ்சப் பொய்ம் மைத் தோற்றத்தையும் கலங்கச் செய்யும்: பொய்வினைக்கு உதவும் வாழ்க்கை அரக்கரையும் கலங்கச் செய்யும் (கலங்குதல்-அஞ்சுதல்)

எப்போதும் உலகம் யாவினுள்ளும் [பிரபஞ்சம்] மறைந்தும், நிறைந்தும் உள்ள அந்தப் பரம்பொருள், இப்போது, கையில் வில்லேந் திக் கொண்டு வெளியேறக் காரணம் யாது?

காரணம் மறைவானது. மறைவை [மறையை-வேதத்தை] உணர்ந்தவர்கள் ஞானிகள்.

மெய்ப்பொருளாகிய முழு முதற்பொருள், மண்ணுலகிற்கு வில் லேந்திக் கொண்டு வந்த காரணம், மறைகளுக்கும், முனிவர் யாருக்கும், மலர்மிசை அயனுக்கும், மற்றைத்துறைகளின் முடிவுக்கும் தெரியும். மற் றையோர்க்குத் தெரியாது.

இரக்கம் அற்ற வாழ்க்கையினராய அரக்கர்களால், அறம், நெறி பிறழ்ந்துள்ளது.

நெறி பிறழ்ந்த அறத்தை நெறிப்படுத்துவதற்கு, காத்தலைத் [நிலைபெறுத்தல்] தன் கடமையாகக் கொண்டிருப்பதால், அம் மெய்ம் பொருள், அறைகள் கழல் இராமனாக வந்துள்ளது என்று காரணம் கூறுவர், மறைகளை உணர்ந்தவர்.

அவர், இலங்கைக்குச் சென்று போர் செய்து, அறத்தை நெறிப் படுத்துவார்.

## மறைகளுக்கு இறுதி :

மறைக்கப்பட்டிருப்பது மறை : மறைத்து வைத்திருப்பது மறை.

யாருக்கு மறைக்கப்பட்டிருக்கிறது? எதனை மறைத்து வைத்திருக்கிறது?

அஞ்ஞானிகளுக்கு (பக்குவம் இல்லாதவர்க்கு) மறைக்கப்பட்டுள்ளது. சமய தத்துவங்கள் மறைத்து வைக்கப்பட்டுள்ளன.

அவைகள் தான், வேதம் எனப்படும்.

சமயதத்துவங்களுக்கெல்லாம் [பிரமாணமாயிருப்பது [அளவை] வேதம்.

எந்த சமயதத்துவம் எடுத்துபேசப்பட்டாலும் அதற்கு, மேற்கோள் [அத்தாட்சி] காட்ட வேண்டுமானால், வேதத்தைதான் முன் நிறுத்த வேண்டும்.

வேதத்தில் மறைந்து கிடக்கும் சமய தத்துவங்களின் தெளிவு மறைகளுக்கு இறுதி.

மறைகளுக்கு இறுதி, சமயதத்துவ ஞானத் தெளிவு.

மறைகளுக்கு இறுதியாவார் சமய தத்துவ ஞானிகள். அவர்கள் சொல்வது தான் உண்மை. சத்தியம்.

மறைகளுக்கு இறுதியாவார் என்ன சொல்கின்றார்கள்

"கலங்குவது எவரைக் கண்டால்,
அவர் அன்றே கையில் ஏந்தி
இலங்கையில் பொருதார்"

என்பது வேதத்தின் முடிவாகியஞானம் நிறைந்த மேலோர்கள் கூற்றாகும்

"அலங்கலில் தோன்றும் பொய்ம்மை
அரவு எனப் பூதம் ஐந்தும்
விலங்கிய விகாரப் பாட்டின்

வேறுபாடு உற்ற வீக்கம்
கலங்குவது எவரைக் கண்டால்,
அவர் அன்றே, கையில் ஏந்தி
இலங்கையில் பொருதார் என்பர்
மறைகளுக்கு இறுதியாவர்''

என்பது கம்பராமாயணத்தில் சுந்தர காண்டத்துக் கடவுள் வாழ்த்துக் கவிதை

''மலர் மாலையில் தோன்றும் பொய்ம்மைப் பாம்பு போல, ஐந்து பூதங்களும் ஒன்றிலிருந்து ஒன்று விலகிய [நீங்கிய] காரியப்பாட்டால் (செயல் திறன்) ஏற்பட்ட வேறுபாட்டின் மிகுதி, யாரைக்கண்டால் கலங்குமோ [அஞ்சுமோ] அவர் அல்லவா இப்போது கையில் வில்லேந்திக் கொண்டு இலங்கை சென்று போர் செய்தார்!' என்று சொல்வார்கள். சொல்பவர் யார்? வேதங்களின் முடிவாகிய ஞானம் உணர்ந்தவர்கள். ஞானிகளின் கூற்று இது.

,ஆகவே நாமும், இராமபிரானையே கடவுளாகக் கண்டு கொண்டு வணங்கி வழிபட்டு சரண் அடைந்து உய்வோம்' என்பது இக்கதையின் கருத்துப்பொருளாகும்.

## ஒருமைப்பாடு :

பன்மையில் ஒருமை காண்பவர்கள் கவிஞர்கள். தாம் கண்ட ஒருமைப்பாட்டை, மக்களுக்கு எடுத்துக் காட்டி, அவர்களை நல்வழிப் படுத்துதற்கே, தம் கவிதைகளைப் பயன்படுத்துவது கவிஞர்தம் இயல்பு.

மக்களது சமுதாய வாழ்க்கையிலும் ஒருமைப்பாடு வேண்டும். சமய வாழ்க்கையிலும் ஒருமைப்பாடு வேண்டும் என்ற உயர் பெரும் கொள்கையினர் கம்பர்.

சமுதாய வாழ்க்கை ஒருமைப்பாட்டைக் குலைப்பவை எவ்வெவை என்பதைக் கண்டறிந்து, கம்பர்தம் காவியத்தில், பலப்பல இடங்களிலும், ஒருமைப்பாட்டுத் தடைகளை நீக்கும் வழிகளைக் கவிதைகளில் காட்டியுள்ளார்.

இந்தக் கடவுள் வாழ்த்துக் கவிதையில், சமய தத்துவங்களின் ஒருமைப்பாட்டை அழகுற வடித்துத் தந்துள்ளார் கவிஞர் பெருமான்.

## தத்துவ வேறுபாடு:

கம்பர் காலத்தில். சமய தத்துவம், 'வேதாந்தம், சித்தாந்தம்' என்று இரு வேறுபட்ட நிலையினதாய், மக்கள் உள்ளத்தில் குடிகொண்டிருந்தது.

சமய வாழ்க்கையில், மக்கள் வேதாந்திகளாகவும். சித்தாந்திகளாகவும் திகழ்ந்தார்கள்.

வேதாந்திகளும் சமய வாழ்க்கையினர் தான்: சித்தாந்திகளும் சமய வாழ்க்கையினர்தான்.

இருப்பினும், கருத்தால் வேறுபட்டவராயினர் சமயிகள். வேதாந்தக் கருத்தும். சித்தாந்தக் கருத்தும் வேறுபாட்டால், இரண்டு பெரிய கிளைகளாகத் தோன்றுகின்றன. கிளைகள் இரண்டாயினும் அதன் அடிமரம் ஒன்று தான் என்ற உண்மையை சமயிகள் உணராமற் போய் விடுகின்றனர்.

இந்த, சமயதத்துவப் பேருண்மையை, சமயிகளுக்குத் தெளிவாக எடுத்து உணர்த்துவதற்கு, கம்பர், இந்த இடத்தைப் பயன்படுத்திக் கொண்டுள்ளார்.

உள்ள பொருள் ஒன்று தான் என்ற அத்வைதம் வேதாந்தமாக மலர்ந்தது உள்ள பொருள் ஒன்றுக்கு மேற்பட்டது என்ற, துவைதம்,

விசிட்டாத்வைதமாக விரிந்தது.

இந்த இரண்டையும் ஒன்றுபடுத்துகின்றது இக்கடவுள் வாழ்த்துக் கவிதை. கவிதையின் முற்பகுதி, அத்வைத வேதாந்தத்தை விளக்குகிறது. பிற்பகுதி விசிட்டாத்வைதத்தை விளக்குகிறது.

'அலங்கலில் தோன்றும் அரவு' என்பது, வேதாந்திகள் - மாயவாதிகள் காட்டும் 'கயிறும் பாம்பும்' [கயிற்றில் தோன்றும் பாம்பு] என்ற தத்துவக் கூற்றிற்கு எடுத்துக்காட்டு.

'பூதம் ஐந்தும் விலங்கிய விகாரப்பாட்டின் வேறுபாடுற்ற வீக்கம்' என்பது, வேதாந்திகள் காட்டும் 'பிரம்மமே பிரபஞ்சம்' என்ற தத்துவக் கூற்றை ஏற்றுக் கொண்டதாகும்.

பிரபஞ்சத்தையும் பிரம்மத்தையும் வெவ்வேறாகப் பிரித்துக் காண்பது சித்தாந்தம். இந்த தத்துவப் பேருண்மையை ஏற்றுக் கொண்டது தான், 'அவர் அன்றே கைவில் ஏந்தி இலங்கையில் பொருதார்!' என்பது

'இலங்கை பாழாளாகப் படைபொருதானுக்குப் பல்லாண்டு கூறுதுமே' என்ற பெரியாழ்வார் திரு மொழியை மனத்துப் பதித்துக் கொண்ட கம்பர், வைணவ விசிட்டாத்வைத சித்தாந்தத்தை, வேதாந்தத்துடன் இணைத்துக் காட்டுவது, சமயிகளின் ஒருமைப்பாட்டுணர்வை வளர்ப்பதற்கு மிகவும் உதவுவதாக அமைந்துள்ளது.

### கவிஞர் :

கம்பர்தரும் இக்கவிதை, வேதாந்தமா? சித்தாந்தமா? வேதாந்தமாயும் சித்தாந்தமாயும் அமைந்த கவிதை தரும் கம்பர், கவியா? யோகியா?

யோகம் முதிர்ந்தால் மௌனம், மேளனி, தன் ஞான அனுபவத்

தைக் கவியால் பிறருக்குக் காட்ட இயலாது. காட்டுவதற்கு மௌனம் தடையாகிவிடுகிறது.

கவி, யோகியாவதற்கு ஞான அனுபவமுதிர்ச்சி அனுபவம் கிட்ட வேண்டும்.

இக்கவிதை, ஞான அனுபவ வளர்ச்சியை எடுத்துக் காட்டுவதால், இதனைத் தந்த கம்பர் கவியோகியாகத் திகழ்கின்றார் என்று சொல்லலாம்.

## கதைப் பொருள்:

கடவுள் வாழ்த்தாக அமைந்த இந்தக் கவிதை, சுந்தர காண்டத்து முதல் இடத்தைப் பெற்றுக் கொண்டுள்ளது.

'சுந்தர காண்டத்தின் முழுப் பொருளையும் தன்னுள் அடக்கிக் கொண்டுள்ள முதன்மைக் கவிதை இது' என்று சொல்லலாம்.

'சுந்தரம்' என்றால், அழகு என்று பொருள், காணாமற்போன பொருள் கண்டுபிடிக்கப்பட்டால், அழகு தானாக வரும்.

ஆரணியத்தில், காணாமற்போன, சீதாபிராட்டி. கண்டுபிடிக்கப் பட்டதைக் கூறுவது இந்த சுந்தர காண்டம்தான்,

அதுவும், கண்டுபிடித்தது அனுமன். இந்தக்காண்டம் முழுமையும், சீதாபிராட்டியைத் தேடிக் கண்டுபிடித்த அனுமனையே தலைமையாகக் கொண்டது.

காணாமல் (பிரபஞ்சத்தால் மறைக்கப்பட்ட) மறைந்து இருக்கும் பிரமம்மத்தைக் காட்டுவது ஆச்சாரியன். ஆச்சாரியன் தரும் ஞான ஒளியால்தான், இறைஉணர்வு வளரும். அவ்வுணர்வின் வளர்ச்சசி, பிரபஞ்சத்தில் பிரம்மத்தைக் காண உதவும்.

அந்தப் பரப்பிரம்மம்தான், கையில் ஏந்திக்கொண்டு வந்திருக்கிறது.

'பிறர்க்குக் காணப்படாமல் இலங்கையில் இருக்கும் சீதாபிராட்டி மீட்கப் படப்போகிறாள்' என்ற, எதிர்கால நிகழ்ச்சியை - கதைப் பொருளை உள்ளடக்கிக் கொண்டுள்ளது இந்தக் கவிதை.

சமய தத்துவப் பேருண்மையையும், எதிர்வரும் கதைப்போக்கையும் தனதாக்கிக் கொண்டு, கலை உணர்வோடு உருவாகி வந்த பல கவிதைகளுள் இதுவும் ஒன்று.

கம்பருக்குக் கவிச் சக்ரவர்த்தி, முத்திரை இடும் பல கவிதைகளுள் இதுவும் ஒன்றாகத் திகழ்கின்றது.

விழாவில் வெளியீடு செய்வதற்காக, அவசர காலத்தில் அச்சுவாகனம் ஏறிய காரணத்தால் எழுத்துப் பிழைகள் ஏற்பட்டுவிட்டன.

இதனைப் படிக்கும் அன்பர்கள் முதலில் இந்தப் பிழைகளை, திருத்தி வைத்துக் கொண்டு படிக்க வேண்டுகின்றேன்.

மு. இராமசாமி

## ஓவியப் புரு பிழை திருத்தம்

| பிழை | பக்கம் | வரி | திருத்தம் |
|---|---|---|---|
| வியாமல் (அணிந்துரை) | 3 | 7 | வியவாமல் |
| காட்சியின் | 6 | 8 | காட்சியில் |
| கவர்கின்றன | 6 | 14 | கவர்கின்றது |
| மன்னவரை | 7 | 13 | மண்ணவரை |
| அவர்க்க பூமி | 8 | 3 | சுவர்க்க பூமி |
| விளக்குபவராய் | 8 | 9 | விளங்குபவராய |
| கலைஞனின் வண்ணத்தை | 9 | 5 | கலைஞனின்கைவண்ணத்தை |
| பிறிதலை | 9 | 16 | பிறிதிலை |
| பேடையோ | 11 | 2 | பேடையே |
| எழுப்புகின்றன. | 21 | 10 | எழுப்புகின்றது. |
| திரும்புகின்றன | 21 | 11 | திருப்புகின்றது. |
| புலப்படப் புண்ணியன் | 31 | 7 | புலப்படாப்புண்ணியன் |
| கோடிகன் | 33 | 7 | கொடிகள் |
| என்றும் | 33 | 14 | என்னும் |
| செங்கன் | 33 | 16 | செங்கண் |
| செங்கன் | 34 | 1 | செங்கண் |
| அல்ல! | 36 | 7 | அல்லர்! |
| என்ற ஐயப்படியாக | 38 | 16 | என்று ஐயப்படும்படியாக |
| பஞ்சனி | 38 | 21 | பஞ்சணி |
| நம் | 41 | 21 | நாம் |
| கவிஞர்களுக்கொல்லாம் | 41 | 22 | கவிஞர்களுக்கெல்லாம் |
| அவரவர்த்தம் | 43 | 1 | அவரவர்தத்தம் |

| | | | |
|---|---|---|---|
| தெய்வடிவாக | 43 | 2 | தெய்வவடிவாக |
| மாலையின் | 52 | 7 | மலையின் |
| நூலோருடைய | 58 | 12 | நூலோ டுடைய |
| ஒத்தெல்லா | 61 | 1 | ஒத்தெல்லோ |
| கெபடுத்த | 65 | 2 | கொடுத்த |
| எமாங்கத | 65 | 6 | ஏமாங்கத |
| இது | 66 | 23 | அது |
| மூலல் | 73 | 4 | மூலம் |
| சேர்ந்திருந்தால் | 76 | 22 | சேர்ந்திருந்ததால் |
| கட்சி | 82 | 4 | காட்சி |
| சித்தார்தம் | 82 | 10 | சித்தாந்தம் |
| சரண்யம் | 89 | 10 | சரண்யன் |
| அடிபடை | 89 | 19 | அடிப்படை |
| அருதி | 105 | 10 | சுருதி |
| வேலைவை | 105 | 21 | வேலையை |
| மறைந்தது | 107 | 12 | மறைத்தது |
| தன்மை | 108 | 17 | தண்மை |
| இக்கதையின் | 117 | 17 | இக்கவிதை |
| மேளனி | 119 | 24 | மௌனி |
| கையில் ஏந்தி | 121 | 1 | கையில் வில் ஏந்தி |

